வதியோகமாம். வியாழனுச்சத்தி னின்றுதயமாக வியாழன்வாராஞ்சகம் வினுஞ் சுரகவதி யோகமாம்—எ - று. (உக)

## கோசக்கிரகம்.

ஈசன்சதயம்புளிக்குபனியத்தமுத்திரங்கள்
பூசமரிநிலையோரையுநன்றுபொல்லாதவார
மேசுந்திதிவிட்டிநீதுநல்யோகம்பெறவிசையுங்
கோசங்கொளநன்றுநற்கோள்குறித்தெழக்கோமளமே.

(எ - று.) திருவாதிரை சதயம் அவிட்டம் மிருகசீரிடம் அனுடம் அத்தம் உத்திரத்திரயம் பூசம் திருவோணம் இந்நாட்களிற் றிராசியுதயமாக பாவவாரம் பொல்லாதபக்கம் விட்டியொழிந்து பஞ்சாங்கயோக நன்றாகச் சுபக்கிரகோதயத்திற் கோசக்கிரகம் பண்ணுவது—எ - று. (உஉ)

## உபநயனம்.

தாழ்வினுபநயனம்விதிகெற்பவாண்டாதிக்குமே
லேழெட்டுமொன்பதும்பத்தினுமெய்ந்தவுடற்குயிருக்
கூழ்கொண்டமந்திரியேழைந்திரண்டுபன்னொன்றுபத்துஞ்
சூழண்டவொன்பதுமுற்றுறுகாலஞ்சுபமென்பரே.

(எ - று.) உபநயனம் பண்ணுமிடத்து கெற்பாதான முதலாக எ, அ, கூ, ௰ இவ்வயதில் சந்திர லக்கினத்துக்குஞ் சென்ம லக்கினத்துக்கும் பிரகஸ்பதி எ, ரு, உ, கக, ௰, க இவ்விடங்களில் நிற்குமாண்டில் உபநயனம் பண்ணுவது—எ - று. (உங)

## இதுவுமது.

அல்லாவிடத்திற்குருவுநிற்சேய்க்கற்ராம்வினையாம் [கு
பொல்லாவிடமொன்றுநிற்பெர்ன்றுமாடையும்பொன்னவற்
நல்காவிதியவற்குர்ரவக்கோளுக்கும்பூசைபண்ணி
வில்லார்நுதலாய்விதிவகைநூலிடவேண்டுவரே.

(எ - று.) வியாழ னுபயவிலக்கினத்தும் ஆகாதென்ற விடங்களினு நின்று லாகாது. உபநயனம் பண்ணினால் வியாதியாதல் அவமிருத்து வாதலுண்டாம். புத்திரனுக்கு ஒரு இலக்கினத்துக்கு நல்லனாய் ஒரு இலக்கினத்துக்குத் தீயனாயிருக்கில் பிரகஸ்பதிக்கும் பிரீதியாகப் பொன்னும் பீதாம்பரமுந் தானம்பண்ணி யுபநயனம் பண்ணலாம். எக்காலத்தும் பிராமண பூசையும் நவக்கிரகசாந்தியும் பண்ணிக் கொள்ளப்படும்—எ - று. (உச)

இதுவுமது.

பன்னிரண்டாறுநான்கெட்டொடுமூன்றுயிர்மெய்யிற்பைம்
மன்னிலுபநயித்தோன்பிணியாதல்மரித்தறிடஞ் [பொன்
சுன்னுங்குருதியுஞ்சென்மத்துமந்தத்துஞ்சூழிலங்கஞ்
சின்னம்படுகைதிடமென்றனர்கடிருந்திழையே.

(எ - து.) பிரசஸ்பதி முன் சொல்லிய வுபயவிலக்கினத்துக்கும் சன்மவிலக்கினத்துக்கும் கஉ, ௬, ௪, ௮, ௩ இந்தவிடங்களினும் சென்மவிலக்கினத்துஞ் சந்திரலக்கினத்துநிற்க உபநயனம் பண்ணுகில் வியாதியாதல் மரணமாதலுண்டாம். இரண்டிலக்கினத்துக்குஞ் சனி செவ்வாய் சென்மத்தும் கஉ-ம் இடத்துநிற்கில் அங்கவீனமுண்டாம்—எ - று. (உ௫)

இதுவுமது.

மன்னவர்பன்னொன்றில்வைகாசியானியினாலிடலாம்
பன்னிரண்டாமாண்டிலாவணியாடிபகர்வணிகர்க்
குன்னுமறையவர்க்காண்டேழினாலிடலுத்தமமாம்
பொன்னனையாய்நன்றெனப்போற்றுவார்களிப்பூதலத்தே.

(எ - து.) க்ஷத்திரியருக்குப் பதினொராம் வயதில் வைகாசி யானியிலும், வைசியருச்குப் பன்னிரண்டாம் வயதில் ஆடியாவணியிலும், பிராமணருக் கேழாம்வயதில் வசந்தருதுவாகிய சித்திரை வைகாசியிலும் உபநயனம் பண்ணலாம்—எ - று. (உ௬)

இதுவுமது.

பொன்னவன்மீனம்பொருசிலைநண்டுபொருந்துமாண்டு
தன்னிகரில்லையவனட்புறினுந்தகுந்தகாத
வின்னலுறும்பகைநீசத்துறிலின்பமாம்வசந்த
மன்னதனுக்கிருபக்கப்பருவமுமாமென்பரே.

(எ - து.) வியாழன் மீனந் தனு கர்க்கடகத்து நிற்கினும் மித்திரபவனங்களிலே நிற்பினும் உபயவிலக்கினத்துக்கு மனுகூலமல்லாத மாதத்தினுஞ் செய்யலாம். பகைநீசத்து நிற்கும் ஆண்டுதெவிரப்படும். உபயவிலச்கினத்துக்கு அநுகூலனாயிருக்கிற சத்துரு நீசங்களினின்றகாலமுஞ் சாந்திபண்ணி யுபநயனம் பண்ணலாம். பிராமணருக்கு வசந்தகாலமுத்தமம். மாசி பங்குனி ஆனி ஆடியுமாம்—எ - று. (உ௭)

இதுவுமது.

சித்திரையத்தம்பனிசோதிதிங்கட்புட்டோர்புனர்த
முத்திரமுன்றுத்தமம்பூசமோணம்பரிசதய
மத்திமமிங்கிவற்றின்னின்றகோளங்சகங்கள்சுபம்
வைத்தனளன்றென்றுபநயித்தற்குநம்வாசிட்டனே.

(எ - து.) சித்திரை அத்தம் அனுஷம் சோதி மிருகசீரிடம் அவிட்டம் உரோகிணி புனர்பூசம் உத்திரத்திரயம் இவை உத்தமம். பூசம் திருவோணம் அசுவதி சதயம் இவை மத்திமம். இந்நாட்களிற் சுபாங்சகங்களிலே உபநயனம் பண்ணலாம்—எ - று. (௧௮)

இதுவுமது.

இருவகைப்பக்கத்துநன்றிரண்டேழைந்துமாறுமூன்றும்
பெருமதியிற்பதின்மூன்றும்பத்தேகாதசியும்பெறு
மிருள்செறிபக்கத்திலாதியுநன்றென்றினவனையாய்
கருதுறுநூல்வினைக்குக்கலைவல்லவர்காட்டினரே.

(எ - து.) பூருவபக்கத்தும் அபரபக்கத்தும், துதியை பஞ்சமி சத்தமி சட்டி திருதியையாம். பூருவபக்கத்துத் திரயோதசி தசமி ஏகாதசி அபரபக்கத்துப் பிரதமை இவை நன்று. அல்லாதவை யாகாது—எ - று. (௨௯)

இதுவுமது.

குற்றங்குணங்களையெண்ணிக்குறைதிகமானநாளிற்
பெற்றதடிமீன்சிலைகுளிர்பெண்ணெழச்சுத்தியெட்டின்
மற்றும்புகர்புந்திமந்திரியங்சகமெட்சிநன்றாய்ச்
சொற்றனர்நூல்வினைக்கம்புலியங்சகஞ்சொல்லிலரே.

(எ - து.) முன்பு குணகுணப்படலத்துச் சொன்னபடியே குண தோஷநிரூபித்துக் குறைதிகமானநாளில் இடபம் மிதுனம் மீனம் தனு கர்க்கடகம் கன்னி இந்த விராசிகளுதயமாக அட்டமசுத்தியுண் டாக வெள்ளி புதன் வியாழன் இவர்களுடைய வாரோதயங்களிலே யுபநயனம் பண்ணலாம். சந்திரவாரோதயம் விசேஷித்துத் தவிரப் படும்—எ - று. (௩௦)

இதுவுமது.

உதயத்துமத்தத்துமாறெட்டினுமதியும்பர்குருப்
புதனெட்டுமோறும்புகரேழுமாறெட்டும்பொன்னனையாய்
சிதைவிக்குமாண்பினைத்தீயவர்மூன்றாறுபன்னொன்றினி
லிதமுற்றகாலநன்றல்லாவிடங்களிடர்தருமே.

(எ - து.) சந்திரனுதயத்தும் கஉ, ௬, அ, இவ்விடத்து நிற்கிலாகாது. புதனும் வியாழனும், ௬, அ, இவ்விடத்து நிற்கிலாகாது. சுக்கிரன் ௬, எ, அ, இவ்விடத்து நிற்கிலாகாது. பாபக் கிரகங்கள் ௩, ௬, கக, இவ்விடங்களினிற்கி லுத்தமம். அல்லாவிடங்களி னிற்கிலாகாது—எ - று. (௩க)

இதுவுமது.

சந்திரவட்டமம்வைநாசிசஞ்சென்மமேழைந்தந்த
மந்தணர்நூலிடற்காகாதனவென்பரல்லவற்றின்
முத்தியமூன்றுமொழிந்தனநாட்களுமுத்தமமா
மந்திரிவாசிட்டன்கார்க்கியனூன்முறைவைத்தனரே.

(எ - து.) சந்திராட்டமமும் வைநாசிகமும் சென்மத்திரயமும் வதநட்சத்திரமும் பிரத்திய நட்சத்திரமும் இருபத்தேழா நட்சத்திரமும் பிராமணர் முதலிய மூன்று வருணத்தார்க்கும் உபநயனத்துக்காகாது. அல்லாத சம்பத்து நட்சத்திரமும் விபத்து நட்சத்திரமும் க்ஷேம நட்சத்திரமும் சாதக நட்சத்திரமும் மித்திர நட்சத்திரமும் விபத்து நட்சத்திரமும் உபநயனத்துக்கு மிகவுநன்றும்—எ-று.

வேதாரம்பம்.

வாரணமாதிமூன்றைப்பசிபூசங்கள்வாரணம்புள்
நாரணன்னீசன்பனியுருளுத்திரநாவாய்நன்று
மேரணிமுற்றிதிநன்றெட்டிருத்தையுவாவொழிந்தாங்
காரணமோதமுன்கல்விக்குரைத்தவுமாமென்பரே.

(எ - து) அத்தம் சித்திரை சோதி அசுவதி புனர்பூசம் பூசம் சதயம் அவிட்டம் திருவோணம் திருவாதிரை அனுடம் உரோகிணி உத்திரத்திரயம் இரேவதி இந்நாட்களிற் பூருவபக்கத்திலே அட்டமி இருத்தை உவாவுமொழிந்த திதிகளிலே சரராசி யுபயராசி யுதயமாக வேதாரம்பம் பண்ணலாம். இவ்விடத்துச் சொல்லிச் சொல்லாதன வித்தியாரம்பத்துச் சொன்னபடியே கொள்க—எ-று. (௩௩)

உபாகன்மம்.

வடிக்கதிர்நண்டரிதோகைசேர்சாந்திரமாதங்களி
னடக்குறும்வேதவுரைநூனவின்றநாணற்கோளெழத்
தொடக்குறுமாரணமென்றுசொன்னூர்துடிநேரிடையாய்
முடிப்பதுபின்பொழுதாந்திங்கள்வாரோதயமுறவே.

(எ - து.) ஆதித்தியன் சர்க்கடகம் சிங்கம் கன்னி இவற்றிலே நிற்கச் சாந்திரமாதங்களிற் பூரணையிலே தத்தஞ் சூத்திரகங்களிற் சொன்னநாளிலே சுபக்கிரகோதய நோக்குண்டாக உபாகன்மம் பண்ணுவது. நடக்குமென்றதனால் சுக்கிரன் அத்தமயமின்றி யிருக்கி லுபாகன்மத்துச் சிங்கமாதமுத்தமம். யாதாயினு மொருவித்தையை முடிக்குமிடத்து அபராணத்திற் சந்திரவாரோதயத்திலே முடிப்பது- எ - று. (௩௪)

## சமாவர்த்தனம்.

மறைநூன்முறையேவிரதமுடித்துமயிர்வினையின்
முறையேயகாலத்துருடேர்முகுந்தன்மூன்றுத்திரங்க
டுறைசேர்பனையிருபூசமத்தங்தோணிமான்றலையில்
கொறிமீனரிதேளொழிந்தெட்டுச்சுத்திகொள்கோமளமே.

(எ - து.) வேதமுறையே நாலு விரதங்களையும் அவரவர் சூத்திரஞ் சொன்னபடியே உத்தராயணத்திலே விவாகத்துக்கு முன்னே சௌளத்திற்குச் சொன்னநாளினு முகூர்த்தத்தினுமுடிப்பது. பின்பு சமாவர்த்தனம் பண்ணுமிடத்து உரோகிணி திருவோணம் உத்திரத்திரயம் அநுஷம் புனர்பூசம் அத்தம் இரேவதி மிருகசீரிஷம் இந்நாட்களிலே அட்டமசுத்தியாகப் பகற்காலத்திலே ஆகாச நின்மலமா யிருக்கச்செய்வது—எ - று. (௩௫)

## இதுவுமது.

போற்றியபஞ்சாங்கயோகம்பொருந்தவருணங்களிற்
சாற்றியமூவருக்குஞ்சமாவர்த்தனமற்றொழிந்தோர்க்
கேற்றினர்நல்லவிழையுடுத்தற்குமென்றெண்ணின்மிக்கோர்
கூற்றெனச்சொல்லினன்றென்கடுவைக்கிறைகோமளமே.

(எ - து.) சமாவர்த்தனம் பண்ணுமிடத்துப் பஞ்சாங்கயோகநன்றாகக் குறிக்கமான சுபமுகூர்த்தத்திலே மூன்று வருணத்தார்க்குஞ் சமாவர்த்தனக்கிரியை முடிப்பது. ஒழிந்தோர்க்குப் புண்ணிய தீர்த்தங்களின் மூழ்கி யிரண்டு நவவஸ்திர முடுத்துப் பத்திரகாளி பூசை செய்து மீளுவதென்று பல சாத்திரங்களினுஞ் சொல்லப்பட்டது—எ - று. (௩௬)

மைந்தர்வினைப்படல முற்றிற்று.

ஆக்கவித்துறை ௩௫௭.

# ஏர்மங்கலப்படலம்.

## பூமிப்பிரவேசம்.

சித்திரைபூசமகம்பனைசோதிசிவம்பரணி
யுத்திரமூன்றுவிடைகன்னிதேணன்றுறுநவமி
பத்திரைநீத்துவியாழமதிபுந்திபார்மகனுட்
சுத்தநல்லெட்சியிற்பூப்பிரவேசந்துடியிடையே.

(எ - து.) சித்திரை பூசம் மகம் அனுஷம் சோதி திருவாதிரை பரணி உத்திரத்திரயம் இந்நாட்களிலே இடபம் கன்னி விரிச்சிகம் இவ்விராசிகளுதயமாக நவமி பத்திரை யொழிந்த திதிகளிலே வியாழன் திங்கள் புதன் செவ்வாய் இவ்வாரோதயங்களிற் பூமிப்பிரவேசம் பண்ணுவது—எ - று. (க)

## ஏர்ப்பூட்ட.

தேரிருபூசங்கலந்தேட்கடையத்தமுத்திரங்கள்
மூரிதடிகுளிர்மீன்கலைசென்மங்கள்மூன்றுநன்று
மேர்வினைசெய்யிலிசையுஞ்சிறப்பெழிலார்கடுவைப்
பேரறிவாளர்பெருவளம்போலப்பிறைநுதலே.

(எ - து.) உரோகிணி புநர்பூசம் பூசம் இரேவதி மூலம் அத்தம் உத்திரத்திரயம் இந்நாட்களிலே இடபம் மிதுனம் கர்க்கடகம் மீனம் மகரம் சென்மலக்கினம் சென்மத்திரயம் சுபவாரோதயங்கள் சம்பவிக்க உழுதல் நன்றாம்—எ - று. (உ)

## இதுவுமது.

கன்னியர்முன்னாகன்னாளிலேகிக்கார்வண்ணனுடன்
மன்னிலமாதைவணங்கிப்படைச்சான்மூன்றைந்துவரத்
தென்னெனவண்டடைபூங்குழன்மாதேசெழுநிலந்துப்
பொன்னுறுமேர்ப்பூட்டப்போகம்விளைக்குஞ்செழும்புவியே.

(எ - து.) கன்னிகைகள் முன்னாக முன்னேர்ப்பூட்டச் சொன்னநாளிலே தனது காணியிற்போய் அவ்விடத்திலே தரணியதிபதியாயிருந்துள்ள புருடோத்தமனையும் பூமதேவியையும் வணங்கி ஏர்ப்பூட்டிக் கிழக்குறவாதல் வடக்குறவாதல் மூன்று படைச்சால் ஐந்துபடைச்சால் உழுதுவிடப் பூமதேவி மிக்க போகங்களைக்கொடுப்பள்-எ-று.

## கலப்பைச்சக்கரம்.

இரவிநிலைத்திடுநாண்முன்பின்மூன்றுமிருநுகத்தில்
விரவிடுமாறுமுழறித்மேழியிலோரிரண்டும்
பரவுபின்னுணிபடைவாயிலாறும்பலன்மத்திமந்
திரமுறுமேர்க்காலநடுவிரைந்தாகுந்தினமினிதே.

(எ - து.) கலப்பைபோல வரைந்து ஏர்முடியினடுவின் ஆதித்தியனின்ற நாளை வைத்து வலமாகவெண்ணி யிதனுடன் மூன்று நாளும் நுகத்திலாறுநாளு மாகாது. மேழியிலிரண்டுநாளும் பின்னுணியின் மூன்றுநாளும் கொழுவின் மூன்றுநாளு மத்திமம். ஏர்க்காலடுவிற் பத்துநாளு முத்தமம்—எ - று. (௪)

## விதைக்க.

காலம்பெறவானியாடியிற்காதல்செஞ்சாலிவித்தன்
மூலங்கலமகமுற்றில்விளக்குருள்பூசமத்தந்
தாலமரிசுண்ணமுத்திரமூன்றுத்தமம்புனர்தஞ்
சிலத்தரும்பரிமான்றலைசெங்கைபுண்மத்திமமே.

(எ - து.) ஆனி ஆடிமாதத்திலே யாவர்க்கும் விருப்பமுடைய நெல்லுவிதைப்பது. விதைக்குமிடத்து மூலம் இரேவதி மகம் விசாகம் சோதி உரோகிணி பூசம் அத்தம் அனுஷம் திருவோணம் சதயம் உத்திரத்திரயம் இவை யுத்தமம். புனர்பூசம் அசுவதி மிருகசீரிடம் திருவாதிரை அவிட்டம் இவை மத்திமம்—எ - று. (ரு)

## இதுவுமது.

விடைகலைசியங்குளிர்மீனநன்றுவியன்றுலைசா
றடியிவைமத்திமமட்டமசுத்திகொள்சாலிவித்தர்
சுடரவன்கால்வாரமெட்சியுமுத்தமஞ்சுங்கனெழிற்
கடியனென்றூர்குருவெட்சினன்றுங்குழற்காரிகையே.

(எ - து.) இடபம் மகரம் சிங்கம் கர்க்கடகம் மீனம் இவையுத்தமம்; துலாம் கும்பம் மிதுனம் இவை மத்திமம்; அட்டமசுத்தி யுண்டாக நெல்லு முதலிய தானியங்கள் விதைக்க நன்று; ஆதித்தியன் வாரோதயாம்சம் நன்று; நெல்லுவிதைக்க எ-ம் இடத்துச் சுக்கிரனாகாது; விருகற்பதி யுதயலக்கின முத்தமம்—எ - று. (௬)

ஆசையிற்கேகவடைத்ததினத்திலணிதிதியிற்
பேசுறும்வாரத்தில்யோகினிபின்வலம்பெற்றகாலை
யேசுறுதிக்கையடைத்தவிராசிதிரமொழியப்
பேசுவர்நல்லோர்பெருவிதைக்கேகப்பிறைநுதலே.

(எ - து.) மேல்யாத்திரை சொல்லுமிடத்துத் திக்குக்களுக்கடைத்த திதிவார நாட்களிலே யோகினி பின்னும் வலமுமாகத் திக்குக்களை யடைத்த இடபம் சிங்கம் விரிச்சிகம் கும்பம் ஒழிந்தராசிகளிலே நெல்லு முதலானவற்றை விதைக்கப்போவது—எ - று. (எ)

இதுவுமது.

காரிதன்வாரத்திடையாம்பொழுதிற்கருந்தானியம்
பாரித்து*வித்தலும்பார்மகன்வாரத்தவனெட்சியி
னேரொத்தகொள்வித்தனெல்வித்தல்ஞாயிறெழுவவன்றன்
வாரத்துநன்றுங்கொடிவைத்திடமூலநன்றென்பரே.

(எ - து.) சனிக்கிழமையிலே மத்தியானகாலத்திற் சனியுதயமாகக் கறுப்புத்தானியம் விதைக்கலாம். செவ்வாய்க்கிழமைச் செவ்வாயுதயமாகக் கொள்ளுவிதைக்கலாம். ஞாயிற்றுக்கிழமை சூரியோதயமாக நெல்லுவிதைக்கலாம். மூலத்திற் கிழங்கு கொடி வைக்கலாம்—எ - று. கொடியென்கையால் வெற்றிலைக்கொடி வைக்கவும் பெறுமெனக. (அ)

பலபயிரிட.

கரும்பாங்கரும்பிற்கமுகாம்பரியிற்பயறுநன்றும்
வருந்துமறுவையிற்சோதியிற்பூமரமாஞ்சகடத்
தரும்பார்பலவாம்பரணிவழுதுணையாம்பனையிற்
செருந்தாருழுந்தாங்கரியனவித்திடச்செக்குநன்றே.

(எ - து.) புனர்பூசத்துக் கரும்பு நடுவது, அசுவதியிற் கமுகு வைப்பது, சித்திரையிற் பயறு விதைப்பது, சோதியிற் பூமரம் வைப்பது, உரோகிணியிற் பலா வைப்பது, பரணியில் வழுதுணை நடுவது, அனுஷத்தி லுழுந்து விதைப்பது, சதயத்திற் கருந்தானியங்கள் விதைப்பது—எ - று. (கூ)

இதுவுமது.

பனையாம்பனையிற்படர்கிழங்காங்குருகிற்கடுகுந்
தினையாஞ்சதயத்திற்செப்பியநாளெட்சியிற்கிழங்கு
வினையாமதோமுகநாளின்மேனோக்கினமேன்முகத்தாம்
பனையாம்படருவனபக்கவானனத்தாமென்பரே.

(எ - து.) அனுடத்திற் பனை விதையிடுவது. மூலத்திற் படர்கொடி கிழங்கிடுவது. சதயத்திற் கடுகுந் தினையும் விதைப்பது. இவ்

* வித்தல் - விதைத்தல்.

விடத்துச் சொன்னாட்க ளுதயமாகவும், இந்த மரங்கள் பயிர்கள் வைக்கவும் பெறும். முன் சொல்லிப்போந்த அதோமுக நாளிலே யதோமுகமான ராசி யுதயமாகக் கிழங்கு நடுவது. மேன்முகமான நாளிலே மேன்முகமான ராசி யுதயமாகப் பனை முதலிய மரங்கள் வைப்பது. திரயமுகமான நாளிலே திரயமுகமான ராசி யுதயமாகப் படர்கொடி முதலியன வைப்பது—எ - று. (கo)

### நாற்றுநட.

வித்திற்கடைத்தவந்நாளினின்மேன்முகவோரையெழ
வொத்தபிறையொடிருத்தையுவாவட்டமியொழித்துச்
சுத்ததிதியிற்சுபரெட்சியிற்சொன்னவோரையினின்
முத்தனைவெண்ணகையாய்நடச்சொன்னார்முனிவரரே.

(எ - று.) விதைக்கச் சொன்ன நாளிலே ஊர்த்துவ முகமான ராசிளுதயமதாக பூருவபக்கத் திருதியை யளவான திதியு மிருத்தையு முவாவு மட்டமியு மொழிந்த நல்ல பக்கத்திலே சுபக்கோளுதயமாக விதைக்கச் சொன்ன லக்கினத்திலே நெல்லுநாற்று நடலாம். வித்திக்கில் மிடத்துச் சுபநாளாம்—எ - று. (கச)

### கதிரறுக்க.

பன்னுங்கதிர்களறுத்தற்குச்சோதிபனைமகம்யாழ்
மன்னிருபூசமூலக்கைபுண்மான்றலைதோணிமூல
முன்னுமுறமத்தமுத்திரமுன்றுருடோர்சதயம்
பின்னுமறுவைபுதன்சனிபொன்பெறும்பெண்ணணங்கே.

(எ - று.) சோதி அனுடம் மகம் அசுவதி புனர்பூசம் பூசம் திருவோணம் அவிட்டம் மிருகசிரிடம் இரேவதி மூலம் விசாகம் அத்தம் உத்திரத்திரயம் உரோகிணி சதயம் சித்திரை இந்நாட்களிலே புதன் சனி வியாழம் இவ்வாரோதயங்களிலே பொங்கல் பண்ணிக் கதிரெடுப்பது—எ - று. (கஉ)

### இதுவுமது.

மேடமூர்த்தேளும்விரும்பிலர்மிக்கபுதன்வியாழ
னுடியவாரோதயநாலிலம்பொனவின்றபொன்கா
னீடியநாளிலக்காலமறுக்கநன்றுநிரையே
தேடியகாயிலைபூப்பறித்தற்குமீன்றேண்மறியே.

(எ - று.) மேடம் விரிச்சிகமொழிந்த ராசிகளிலே புதன் வியாழன் வாரோதயங்களிலே யாதல் ௬-ம் இடத்து வியாழனிற்க வியாழனஞ்சத்தாதல் நெற்கதிரெடுப்பது. மீனம் விரிச்சிகம் மேடம் அடைவே காயிலை பூப்பறிப்பது—எ - று. (கரு)

## தானியப்பிரவேசம்.

ஓணம்பரணிமகன் சிவனத்தமுருண்முறத்திற்
கோணரவம்புதன்வீள்குருவாரோதயங்குளிகன்
ருணுப்பெறுமோனராண்டேழினிற்பொன்றருமிரண்டு
பேணப்படுஞ்சுத்திநெல்லறுத்திற்புகப்பேரிதமே.

(எ - து.) திருவோணம் பரணி மகம் திருவாதிரை அத்தம் உரோகிணி விசாகம் இந்நாளிலே, சனி இராகு புதன் வியாழன் இவர்கள் வாரோதயங்களிலே திரராசிகளுங் கர்க்கடகமுங் குளிகோதயமுமாக வியாழன் எ-ம் இடத்து நிற்க உ-ம் இடஞ் சுத்தியாகத் தானியப்பிரவேசம் பண்ணுவது—எ - று. (கச)

## தானியம் வைக்க.

உலையாதமுற்றில்பரணியிலோணத்தினிற்கடையி
னிலையானகாலினெறிகுளிர்தேளெழநெற்கொடுபோய்க்
குலையாதகூட்டிற்குருபடுங்காலையிற்கூடவிட
மலையாமெனப்பலசோதிடறான்முறைவைத்தனவே.

(எ-து.) விசாகத்தினும் பரணியினும் திருவோணத்தினும் நாலாங்காலிலே கர்க்கடகம் விரிச்சிகம் உதயமாக வியாழன் எ-ம் இடத்திலே நிற்க நெல்லு முதலிய தானியங்களை கூட்டிலேயிட மலைபோலப் பெருக்கமுண்டாம்—எ - று. (கரு)

## புதிதுண்ண.

பறவைகலம்பரியோணம்பனையுத்திரங்கண்மூல
மறுவைவிளக்கிருபூசமகமத்தமுற்றில்சுண்ணஞ்
செறிசகடமான்றலைநன்றுமேடமீன்றேளொழியப்
பெறுமுதயத்துப்புதிதுண்ணலாமென்பிறைநுதலே.

(எ - து.) அவிட்டம் இரேவதி அசுவதி திருவோணம் அனுடம் உத்திரத்திரயம் மூலம் சித்திரை சோதி புனர்பூசம் பூசம் மகம் அத்தம் விசாகம் சதயம் உரோகிணி மிருகசிரிடம் இந்நாட்களிலே மேடம் மீனம் விரிச்சிகமொழிந்த ராசிகளிலே சுபக்கிரக வாரோதயமாகப் புதிதுண்ணலாம்—எ - று. (கசு)

## இதுவுமது.

அன்னவிதியிற்கடைச்தவையாவுமணியிழையாய்
தன்னுடைநாளொழிந்தல்லாதசன்மமும்பத்திடத்துப்
பொன்னெழித்துச்சுத்தியும்புதிதுண்ணப்பொலிவுடைய
நன்னிலவெட்சியுநற்கோளுறுமீனுநன்றென்பரே.

(எ - று.) சொல்லிச் சொல்லாதன அன்னப் பிராசனத்துக்குச் சொன்னபடியே கொள்க. சென்மநட்சத்திரமொழிந்த பத்தாநாளும் இருபதாநாளும் ௬௦-ம் இடத்து வியாழனொழிந்தால், சுத்தியும் பூருவ பக்கச் சந்திரோதயமும் சுபக்கிரக நிற்கப்பட்ட மீனமும் புதிதுண்ணலாம்—எ - று.

ஏழ்மங்கலப்படல முற்றிற்று.

ஆகக்கலித்துறை-௱௭௪.

---

## தெய்வப்பிரதிட்டைப்படலம்.

---

### நாராயணப்பிரதிட்டை.

திருத்தகுமன்னர்க்குமூர்க்குந்தலைவற்குஞ்செய்யகண்ணாய்
பொருத்தம்பெறமாசியாடிபுரட்டாதிமார்கழியும்
வருத்தம்பெறநீத்துவான்புகர்பொன்னொளிவாய்த்தநாளிற்
கருத்துறுகண்ணனைத்தாபிக்கலாமென்கனங்குழையே.

(எ - று.) இராசாவுக்கு மூருக்கும் யசமானுக்கும் பொருந்த மாசி ஆடி புரட்டாதி மார்கழி ஒழிந்த மாதங்களிலே வியாழன் சுக்கிரனத்தமயமில்லாத காலத்திலே விஷ்ணுவைப் பிரதிட்டை பண்ணலாம்—எ - று. (க)

### இதுவுமது.

தோணிபனைகுன்றபுட்சரஞ்சோதிமதிசகட
மோணமிருபூசஞ்சித்திரையுத்திரந்தூயபக்கம்
பேணுநல்வாரமிருமாண்பிராசிதேணித்தநிரங்
காணுநான்கட்டமசுத்தியிற்றாபனங்கண்ணனையே.

(எ - று.) இரேவதி அனுஷம் சதயம் அவிட்டம் அத்தம் சோதி மிருகசீரிடம் உரோகிணி திருவோணம் புனர்பூசம் பூசம் சித்திரை உத்திரத்திரயம் இந்நாட்களிலே, சுபதிதி சுபவாரத்திலே உபயராசியாதல் விருச்சிகம் ஒழிந்த திரராசியாதல் உதயமாக ௪, ௮, இவ்விடஞ் சுத்தியாக விஷ்ணுவைப் பிரதிட்டை செய்வது—எ - று. (௨)

### சிவப்பிரதிட்டை.

மாசியொழியவுநுமுத்தராயணகாலநன்று
மாசில்சித்தெக்கணத்தைப்பசியாவணியாங்கரனைப்
பேசுவர்தாபனமட்டமராசியொழிந்துபெற்ற
தேசுறுசென்மங்கடாபனத்திற்குச்சிறப்புடைத்தே.

(எ - று.) சிவப்பிரதிட்டை பண்ணுமிடத்து தை முதலான உத்தராயனத்து மாசி யொழிந்த வைந்து மாதத்திலுஞ் செய்யப்படும். ஆடி முதலான தெக்கணாயனத்து ஆவணியும் ஐப்பசியிலுஞ் செய்யலாம். முன்பு சொல்லிய மூவருக்குஞ் சந்திராட்டமந் தவிர்ந்து அனுகூலமான நாளிலுஞ் சென்மத்திரயங்களினுஞ் செய்யப்படும்--எ-று.

இதுவுமது.

பரிமதிசோதியுருள்பனையுத்திரமூன்றுமத்த
முரிதொழுப்பூசங்கரும்புத்தமம்புள்ளுமூலமக
மரியான்குன்றிவைமத்திமமானபஞ்சாங்கநன்றாந்
திரமெழுவீசனைத்தாபிக்கலாமென்சிலேறுதலே.

(எ - று.) அசுவதி மிருகசீரிடம் சோதி உரோகிணி அனுடம் உத்திரத்திரயம் அத்தம் இரேவதி பூசம் புனர்பூசம் இவை யுத்தமம். அவிட்டம் மூலம் மகம் திருவோணம் திருவாதிரை சதயம் இவை மத்திமம். இந்நாட்களிலே பஞ்சாங்கயோக நன்றாகக் குணாதிகமான திரராசியிலே சிவப்பிரதிட்டை பண்ணுவது—எ - று. (ச)

இதுவுமது.

மேவியவட்ட.மசுத்தியின்மிக்கநற்கோளெட்சியிற்
றேவரைத்தாபிக்கநன்றாமுபயமுஞ்சீருடைத்தாந்
தேவியர்தங்கட்குபயநல்லோரையைச்செப்புவராந்
தாவில்சீர்ச்சத்தியைத்தாபிக்கலாந்திரந்தாழ்குழலே.

(எ - று.) சிவப்பிரதிட்டை பண்ணுமிடத்தும் மற்றமுண்டான பிரதிட்டைக்கும் அட்டமசுத்த யுண்டாகச் சுபக்கிரகோதயம் பார்வை யுண்டாகக் கொள்வது. உபயராசியுமாம். தேவிமாரைப் பிரதிட்டை பண்ணுமிடத்து உபயராசி பிரதானம். மூலசத்தியைப் பிரதிட்டை பண்ணுமிடத்துத் திரராசியிலே கொள்ளப்படும்—எ - று. (ரு)

சகலப்பிரதிட்டை.

மூன்றுத்திரங்கள்குருத்தோரியின்மூளரியனை
யேன்றகுருகினின்மாதிருவைக்கரியிற்கதிரை
யான்றவரவையியக்கரைத்தாலத்தறுமுகனை
யேன்றவிசாகத்திலிந்துவையிந்துவிற்றாபிப்பரே.

(எ - று.) உத்திரத்திரயம் பூசம் உரோகிணி திருவோணம் இவற்றிலே பிரமாவையும் மூலத்திலே சத்தமாதர்களையும் அத்தத்திலே ஆதித்தியனையும் அனுஷத்திலே நாகதேவரையும் இயக்கரையும் விசா

த்திலே சுப்பிரமணியக்கடவுளையும் மிருகசீரிடத்திலே சந்திர பக வானையும் பிரதிட்டை செய்வது—எ - று. (௬)

இதுவுமது.

திருவிறுக்குத்திரம்பூமிக்குத்தோராரியையழலாங்
கரிமுகற்குச்செய்கைசேட்டைக்குக்கேட்டையிர்காரியருக்
கருளுறுமாதிரைபாரதிக்குத்தோணியம்பிகைக்குத்
தெரிவுறுபூரஞ்செழுமண்டதேவர்க்குச்சித்திரையே.

(எ - து.) இலக்குமியை யுத்திரத்தும் பூமாதேவியை யுரோகிணி யினும் துர்க்காதேவியைக் கார்த்திகையினும் விநாயகரைத் திருவ திரையினும் சேட்டாதேவியைக் கேட்டையினும் சாத்தாவையுங் க்ஷேத்திரபாலனையுந் திருவாதிரையினும் சரசுவதியை யிரேவதியினும் உமாதேவியைப் பூரத்தினும் அண்டதேவரைச் சித்திரையினும் பிர திட்டை செய்வது—எ - று. (எ)

இதுவுமது.

கூறியகுற்றமனைத்தையுமோர்ந்துகுணநிகத்து
ளாறியவேழிற்கதிர்புகர்மால்சனியர்தத்தினி
லூறவர்திங்களதோமுகவெட்சியொழியவானத்
தேறியவானனத்தோரையிற்றுபனநன்றென்பரே.

(எ - து.) முன்சொல்லியபடியே குணதோஷ மாராய்ந்து குண் நிகமான நாளிராசியிலே எ-ம் இடத்து ஆதித்தியன் சுக்கிரன் புதன் சனி இவர்களிற்க ௩௨-மிடத்துப் பாபக்கிரகங்களுஞ் சந்திரோதயமு மதோமுகராசி யொழிந்த லக்கினத்திலே ஊர்த்துவமுகராசி யுதய மாகச் சகல பிரதிட்டைகளும் பண்ணுவது—எ - று. (அ)

இதுவுமது.

திரத்தினிற்றிங்களைக்காலிற்றிரமெனிற்சீர்பெருகுந்
தரத்துச்சநட்பின்மதிநன்றுதாபனத்திற்குநற்கோள்
வரத்துச்சநட்பாட்சியுற்றிரண்டெட்சியின்மன்னிவாழு
முரித்தகண்டத்தொன்பதைந்தினிலாயத்திலுற்றனன்றே.

(எ - து.) சந்திரன் திரராசியிலே சுபாம்சகத்தே நிற்பத்திரராசி யிற் சுபோதயமாகிற் பிரதிட்டை மிகவுநன்று. சந்திர னட்பாட்சி யுச் சத்திலே நிற்கவும் பிரதிட்டை பண்ணலாம். சுபக்கிரகங்கள் நட் பாட்சி யுச்சந்திலே நிற்க உதயம் ௨, கேந்திரம் ௪, ௫, ௧௧, இவ் விடங்களினிற்கப் பிரதிட்டை பண்ணுவது—எ - று. (௯)

இதுவுமது.

நற்கோள்மதிபகைநீசத்துறினுநாற்கண்டத்திடை
புற்கோளெனினுஞ்சனிபூமன்வெய்யவன்போரரவஞ்
சொற்கூடுதயத்திரண்டினின்றூற்றுயர்மூவருக்கு
முற்கூறுதீயவர்மூன்றுறுபன்னொன்றுநன்றென்பரே.

(எ-து.) சுபக்கோளுஞ் சந்திரனும் பகை நீசத்து நிற்பினும்நாற் கண்டங்களிலே பாபக் கிரகங்கணிற்பினும் சனியுஞ் செவ்வாயும் *ஆதித்தியனும் ராகுவும் உதயத்தும் உ-ம் இடத்து நிற்பினு நன்றல்ல. அக்காலத்துப் பண்ணின பிரதிட்டை இராசாவுக்கும் ஊருக்கும் எசமானுக்கும் பொல்லாது. பாபக்கிரகங்கள் ௩, ௬, ௧௧, இவ்விடங்களினிற்கின் மிகவும் நன்றாகும். சந்திரனுக்குப் பகையில்லையாம்—எ-று

இதுவுமது.

அரியரன்வெய்யோன்கணபதிகந்தனயன்வடுகன்
றரைமகள்சூலிபகவதிமோடிபொன்சாவித்ரிக்குப்
பெரியவர்தங்கட்குப்பேசியதாபனமல்லவர்க்குத்
தருமுறையாகமத்தின்படிகொள்கதளிராடியே.

(எ - து.) விட்டுணு சிவன் சூரியன் விநாயகன் சுப்பிரமணியக் கடவுள் பிரமன் கேத்திரபாலன் பூமதேவி துர்க்கை ஈசுவரி சேட்டாதேவி இலக்குமி சரசுவதி இவர்கட்குப் பிரதிட்டை செய்யுமிடத்து முன்சொன்னபடியே செய்யவும். ஏனைய தேவதைகட்கு அவரவராகமங்களிற் சொன்னபடியே பிரதிட்டை செய்வது—எ - று. (௧௧)

இதுவுமது.

சிங்கங்கதிர்க்குந்தடிசிவனுக்குங்குடம்விதிக்கு
மங்கையரிக்குமலைமகளுக்குங்கலைமகட்குந்
தங்குஞ்சிலைமீன்சரஞ்சாத்தனுக்கும்வடுகனுக்குஞ்
செங்கயற்கண்ணுயுபயங்கடாபனந்தேவியர்க்கே.

(எ - து.) சிங்கமுதயமாகச் சூரியனையும் மிதுனமுதயமாகச் சிவனையும் கும்பமுதயமாகப் பிரமனையும் கன்னியுதயமாக விட்டுணுவையும் தனுமீன முதயமாக வீசுவரியையும் இலக்குமியையும் சரசுவதியையும் சரராசி யுதயமாகச் சாத்தனையும் கேத்திரபாலனையும் திரராசி யுதயமாக மற்றுமுள்ள தேவர்களையும் உபயராசி யுதயமாக மற்றுமுள்ள தேவிமாரையும் பிரதிட்டை செய்வது—எ - று. (௧௨)

தெய்வப்பிரதிட்டைப்படல முற்றிற்று.

ஆகக்கலித்துறை ௩௮௬.

* ஆதித்தியனுதயம் நன்றென்பாரு முளர்.

## தெய்வவழிப்படலம்.

### கொடியேற்ற.

மாதத்தினத்திலுமன்னவனுளினுமூர்தினத்துஞ்
சீர்தருசங்கிரமத்திலுந்தீர்த்தமதாவனமுன்
மேதகுமுமேவான்பதிரொன்பதோரொன்பதில்விளங்கக்
கோதினன்னூன்முறையேகொடியேற்றுககோமளமே.

(எ - து.) மாத நட்சத்திரத்திலும் இராசாவினட்சத்திரத்திலும் கிராம நட்சத்திரத்திலும் சங்கிரமதி வசங்களிலும் தீர்த்தமாக நிச்சயித்து இதற்குமுன்னே இருபத்தேழா நாளாதல் பதினெட்டாநாளாதல் ஒன்பதா நாளாதல் தேவர்கட்குத் தந்தஞ் சாத்திரங்களிற் சொன்னபடியே கொடியேற்றுவது—எ - று. (க)

### இதுவுமது.

திங்கட்செயனல்லவாகத்திரமொழித்துத்திருநா
ளங்கத்தெழுசசியர்தணனேக்கச்சராமுதிப்பத்
துங்கக்கொடியேறவுந்தூயசிராடிடைப்பொழுதிற்
றங்குர்திரமெழவுஞ்சாலநன்றென்பர்சான்றவரே.

(எ - து.) திருநாளெழுந்தருளப் பண்ணுமிடத்துச் சந்திரன் சுப கன்ம கேதனுகச் சரராசி யுபயராசி யுதயமாகவும், கொடியேற்று மிடத்துச் சந்திரன் சுபகன்மகேதனுக வியாழனேக்கச் சரராசி யுதயமாகவும் தீர்த்தம் பிரசாதிக்குமிடத்து மத்தியானகாலத்திலே திராசி யுதயமாகவு நன்று—எ - று. (உ)

### இதுவுமது.

சோதிபனையத்தம்பண்டிமுன் றுத்திரஞ்சோணைபரி
யாதியிலட்டமியக்தச்சதுர்த்தசியாரல்வார
மாதிருவிற்கிவைதீர்த்தமதாகவகுத்துமுன்னே
யோதுவரேழ்தினஞ்சார்திசெவ்வாயினிலூண்பலியே.

(எ - து) சோதி அனுஷம் அத்தம் உரோகிணி உத்திரத்திரயம் திருவோணம் அசுவினி பூருவபக்கத்தட்டமி அபரபக்கச் சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை இவை தீர்த்தநாளாகக் கற்பித்து முன்னே யேழு நாட் பிராட்டி யுத்சவம் நடக்கவும், செவ்வாய்க்கிழமைநாள் பெலியிடவுமாம்—எ - று. (ஙு)

### பவித்திர தமனகம்.

ஆடியிலாவணியிற்புரட்டாதியிலட்டமியில்
நாடுஞ்சதுர்த்தசியியைந்தாரரற்குப்பவித்திரம்
பாடியசித்திரையிற்காமபக்கத்துப்பௌரணையி
னீடுதயத்துத்தமனகஞ்சாத்துநிரைவளையே.

(எ - து.) சவுரமாதங்களால் வந்த ஆடி ஆவணி புரட்டாசியிலே பூருவபக்கத்தட்டமியிலாதல் சதுர்த்தசியிலாதல் சுபோதயமாக ஈசுவரனுக்குப் பவித்திரஞ் சாத்துவது. சித்திரை மாதத்துத் திரயோதசியிலாதல் பௌரணையிலாதல் சுபோதயமாகத் தமனகஞ் சாத்துவது—எ - று. காமபக்கமென்று திரயோதசிக்குப் பெயராயிற்று. பூருவபக்கத்துக்கு நாடுஞ் சதுர்த்தசி யென்முர்—எ - று. (ச)

### இதுவுமது.

குளிரரிகன்னியிற்கூடியசாந்திரமாதங்களி
லொளிகொடுவாதசியோணத்திடையுவாவுற்றநற்கோ
டௌிவுறுமேன்முகவோரையிற்சீர்கொள்பவித்திரநூல்
துளவணிமாயற்குச்சாத்தநல்லோர்சொற்றுணிந்தனவே.

(எ - து.) சாந்திரமாதங்களால் வந்த ஆடி ஆவணி புரட்டாசியிலே பூருவபக்கத் துவாதசியிலாதல் பௌரணை திருவோணத்திலாதல் சுபக்கிரகோதயமாக ஊர்த்துவ முகராசியிலே விஷ்ணுவுக்குப் பவித்திரஞ் சாத்துவது—எ - று. (ரு)

### ஸ்ரீஜயந்தி.

திங்களுரோகிணிசேர்ந்தெழச்செங்கதிர்சிங்கமேறப்
பங்கப்படுமட்டமியிலிப்பார்பொறைதீர்வதற்கு
மெங்கட்பிறவிகெடுத்தற்கும்யாதவர்தங்குலத்துச்
செங்கட்டிருநெடுமாலவதாரமுன்செய்தனனே.

(எ-து.) சவுரமாதவகையா லாதித்தியன் சிங்கத்தினிற்பச் சாந்திரமாதவகையால் வந்த ஆவணி மாதத்து அபரபக்கத்தட்டமியும் புதன்கிழமையும் உரோகிணியுங் கூடியநாள் சந்திரோதயமாகக் கிருஷ்ணவதாரமான ஸ்ரீஜயந்தி யுற்சவம் செய்வது—எ - று. (சு)

### கிருத்திகா தீபம் வசந்தோற்வசம்.

கார்த்திகைக்கார்த்திகையிற்கடைக்காலினிடையுவாவிற்
சேர்த்தேறெழத்தீபமேற்றுகசித்திரைச்சித்திரையிற்
பார்த்திரயோதசியிற் * பவுரத்திற்பகனல்லகோள்
மூர்த்தம்பெறவசந்தங்கொள்கவென்றனர்மொய்குழலே.

* பவுரணையென்பது பவுரமென விகாரமாயிற்று.

(எ - று.) கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நாலாங்காலிலே யாதல் உரோகிணியிலாதல் பௌரணையிற் பிரதானமாக இடபவிலக் கினத்துத் திருக்கார்த்திகை விளக்கேற்றுவது. சித்திரை மாதத்துச் சித்திரையிலேயாதல் திரயோதசி பௌரணையிலேயாதல் பகலிலே சுபோதயமாக வசந்தோற்சவங் கொள்வது—எ - று. (எ)

ஏகாதசி.

இரவிதனுவுற்றிடுநாள்வளர்பிறையேகாதசி
பரணியிற்செய்யவன்வாரத்திலேவரிற்பண்புடையோர்
விரவுறுமேகாதசிவிரதம்விதியார்விரதந்
தருதிதிவெய்யோனுதயாதியிலேசரித்துமென்றே.

(எ - று.) ஏகாதசி விரதங் கொள்ளுமிடத்து ஆதித்தியன் றனு விலே நிற்கப் பூருவபக்கத்தேகாதசி கொள்ளப்படும். செவ்வாய்க் கிழமையாதல் பரணியாதல் கூடுமாகி லவ்வாண்டு தவிரப்படும். திதி பிரதானமான விரதங்கள் சூரியோதயத்துண்டான திதியையே கொள் ளப்படும்—எ - று. (அ)

இராப்பகற்கொள்ளும் விரதம்.

அட்டமிநோன்புமமாவாசையும்பதினான்குநான்குஞ்
சுட்டும்விரதஞ்சுடரவனுதிகொள்பூரணமு
முட்டெளிவோணம்பிறந்தநாளாதிரையுற்றநோன்புஞ்
சிட்டரிராவுளநாளினிற்கொள்ளென்றுசெப்புவரே.

(எ - று.) அட்டமி அமாவாசை சதுர்த்தசி சதுர்த்தி இவை களில் அநுட்டிக்கும் விரதங்கள் சூரியோதயத்துண்டான திவசங் களிலே கொள்ளப்படும். பௌரணை திருவோணம் சென்மநட்சத் திரம் திருவாதிரை இவைகளில் அநுட்டிக்கும் விரதங்கள் இராத்திரி யுண்டான திவசங்களிலே கொள்ளப்படும்—எ - று. (கூ)

இதுவுமது.

உதையாதியிலுடைத்தாந்திதியேதிதிநாளிரவி
புதையாவிரவிலுண்டாயதுவாம்புகல்கின்றவிவை
சிதைவாங்கடிகையொராறுக்குளேற்றிருவேகாதசி
புதையாதியிலோர்கலையுளதாந்தினமோதுவரே.

(எ - று.) திதிசரிக்கும் விரதங்க ளுதயாதியிலே கொள்ளப் படும். நாள்சரிக்கும் விரதங்க ளிராத்திரியி லுண்டான திவசத்தைக் கொள்ளப்பெறும். இதில் இரட்டிக்கச் சொன்னதில் பகலாறு நாழி

கைக்குள் திதியற்ருலும், இரவாறு நாழிகைக்குள் நட்சத்திரமற்ருலு மற்றைத்திவசந் தவிர்ந்து முன்னை நாளிலே கொள்ளப்படும். திருவேகாதசி விரதம் சூரியோதயத்தி லொருகலைநின்று மேற்றுவாதசி கூடுகினு மன்றுவிரதங்கொள்ளப்படும். தெசமிகூடினது, * வற்சிக்கப்படும்—எ - று. ஓதுவரேயென்று பன்மையிற் கூறியதாற் சகலாகம புராணங்களிலுஞ் சொல்லப்பட்டதென்க. கலையாவது நாலரைவி நாழிகை—எ-று. (கO)

அந்தோதய மகோதயம்.

நாட்டுங்கதிர்மதியோணத்தெழவாரஞாயிருக
மீட்டும்விதிபாதமேவியநாளைநல்வேதியர்கள்
காட்டுமத்தோதயமென்றுரைத்தார்களங்கன்றினத்திற்
றீட்டுமகோதயஞ்செவ்வாய்க்கருங்கட்சிலைநுதலே.

(எ - து.) ஆதித்தியனுஞ் சந்திரனு மகரத்துத் திருவோணத்திலே நிற்க; ஞாயிற்றுக்கிழமையில் வியதிபாதயோகமுங் கூடிலத்தோதயம். இவை சோமவாரங்கூடின் மகோதய மெனப்படும்-எ-று.

தெய்வவழிப்படல முற்றிற்று.

ஆகக்கலித்துறை ௩கஅஎ.

---

## யாத்திரைப்படலம்.

யாத்திரைக்காகாதநாள்.

பாம்பாதிரைமுற்றில்கேட்டைபரணிமுப்பூரமார
ரீம்பான்முதற்சஷ்டியஷ்டமிசேய்சனிசேரிருத்தை
சாம்பாலவிட்டிபகையானநாள்களிற்றக்கவளி
போம்பாவிமீளாயமலோகஞ்சென்றுபுகுமென்பரே.

(எ - து.) ஆயிலியம் திருவாதிரை விசாகம் கேட்டை பரணி பூரத்திரயம் கார்த்திகை பிரதமை சஷ்டி அஷ்டமி இருத்தை செவ்வாய்க்கிழமை சனிக்கிழமை விட்டிக்கரணம் பகையான நாட்களிவைகளில் யாத்திரைபோமவன் யமலோகத்தை யடைவான்—எ - று. ()

திசையாத்திரை.

புரவிபனையத்தம்புட்டோணிமான்றலைபூசமோண
முானுறுமோரைகட்கெல்லாமுரைத்தனர்யாத்திரைக்குச்
சுரமுறுமுங்கில்குருகுருடோர்சுண்ணமத்திமமாந்
தாமுறுமல்லவைசாற்றியதிக்கிற்குத்தக்கனவே.

---

* வற்சித்தல்—விலக்குதல்.

(எ - து.) அசுவதி அறுடம் அத்தம் அவிட்டம் இரேவதி மிருக சிரிடம் பூசம் திருவோணம் இவ்வெட்டு நாளிறு மெல்லாத் திக்கிற் கும் யாத்திரை போகலாம். புனர்பூசம் மூலம் உரோகிணி சதயம் இவை மத்திமம். அல்லாத நாட்கள் யாத்திரைக்குச் சொன்ன திக் குக்களிற் போகலாம்—எ - று. (உ-)

இதுவுமது.

அங்கிமகம்பனிபுன்முதனுளடைவேழுஞ்செவ்வாய்
திங்களுடன்சுன்புதனுடன்சிவன்கதிர்வெள்ளியுங்
தங்குங்கிழக்குமுதற்றயிரெட்டேன்பாலுண்டுபோகை
மங்கலகோர்கிழக்கும்வடக்குஞ்செலுமற்றுமின்னே.

(எ - து.) கார்த்திகை முதலேழுநாட் கிழக்கும், மகமுத லேழு நாள் தெற்கும், அறுடமுத லேழுநாள் மேற்கும், அவிட்டமுத லேழு நாள் வடக்கும் போகலாம். வாரங்களில் செவ்வாய் கிழக்கும், திங் களுஞ் சனியுந் தெற்கும், புதனும் வியாழனு மேற்கும், ஞாயிறும் வெள்ளியும் வடக்கும் போகலாம். போகுமிடத்து கிழக்குத் தயிர் புசித்தும் தெற்கு எள்ளுத்தின்றும் மேற்குத் தேனுண்டும் வடக்கு பால் புசித்தும் போக என்று. இங்குச் சொன்னாளுங் கிழமையுமல் லாத திக்குக்கள் கிழக்கு மேற்கும் வடக்குந் தெற்கு மொக்கும்—எ-று.

திசையிற் கழிந்தநாள்.

கிழக்காட்டமிசோணைகேட்டைதிங்கட்கேடியாத்திரைக்குச்
சழக்குஅதெற்குப்பரிபதஞ்சட்டிவியாழமேற்கு
முழக்குமுருள்பூசமுற்றிதிவெள்ளிவடக்குத்திரம்
வழக்கத்தம்புத்திருவாதசிவாட்டினன்வாசிட்டனே.

(எ - து.) அட்டமி திருவோணம் கேட்டை திங்கட்கிழமை இவற்றிற் கிழக்குப் போகலாகாது. அசுவதி பூரட்டாதி சஷ்டி வியா ழக்கிழமை யிவற்றில் தெற்குப் போகலாகாது. உரோகிணி பூசம் பிர தமை வெள்ளிக்கிழமை யிவற்றில் மேற்குப் போகலாகாது. உத்திரம் அத்தம் துவாதசி புதன்கிழமை யிவற்றில் வடக்குப் போகலாகாது— எ - று. இவற்றைத் திக்குச் சூலமென்றியாவருங் கழித்தார்களென்க.

இதுவுமது.

அருக்கன்புகர்கிழக்கங்காரகன்றெற்கணிமதிசுன்
வருத்தமுமேற்குப்புதன்மந்திரிவடக்குப்பொருந்தா
வுரைத்தசரங்களுபயங்களுர்த்தமுகவோரைகாட்
சொத்துதயங்களும்யாத்திரைக்காமென்பர்தேமொழியே.

(எ - து.) ஞாயிறும் வெள்ளியுங் கிழக்கு செவ்வாய் தெற்கு திங்களுஞ் சனியுமேற்கு புதனும் வியாழமும் வடக்குப் போகலாகாது. சரராசியும் உபயராசியும் ஊர்த்துவமுகராசியும் நாளும் சிரோதய ராசியும் யாத்திரைக்குச் சிரேட்டமாம்—எ - று. (ரு)

இதுவுமது.

ஒன்பதுமாதியுமந்தமுமில்லாதவொற்றைப்பக்க
மின்பந்தருஞ்சமத்தினாந்திரண்டுமினிமைதரு
மன்புறுபங்குனிகார்த்திகையாடியிலாயபோக்குத்
துன்பந்தருமென்றுதொன்னூலுணர்ந்தவர்சொல்லினரே.

(எ - து.) பக்கங்களில் நவமியும் பிரதமையும் பூரணையுமொழிந்த வொற்றித்த பக்கங்கள் யாத்திரைக்கு நன்று. இரட்டித்த பக்கங்களில் தசமியும் துதியையு நன்று. இவையல்லாத பக்கமாகாது. பங்குனி கார்த்திகை ஆடி இம்மாதங்கள் விசேஷித்துத் தவிரப்படும் —எ - று. (சு)

இதுவுமது.

பிறந்தவிராசியுமூன்றுறுபன்னொன்றிரண்டிற்போக [ந்தத்
வறைந்துயிரைந்தொன்பதேழ்நான்கிரண்டுபன்னொன்றுட
துறைந்தநற்கோளேழினுங்கிற்புகர்மாலொழிந்துசுத்தி [றே
சிறந்தனபோகைக்குத்தீக்கோள்மூன்று*றயஞ்சேர்கைநன்

(எ - து.) சென்மராசியும் ௩, ௬, ௧௧, ௨, இவ்விராசிகளிலும் யாத்திரைபோகலாம். போமிடத்து உதயம் ரு, ௯, எ, ச, உ, ௧௧, ௧௨, இவ்விடங்களிற் சுபக்கிரகஞ்சணிற்கலாம். இவற்றிற் சுக்கிரன் எ-ம் இடத்தும் புதன் ச-ம் இடத்து மொழியக்கொள்வது. பஞ்சம சுத்தியுண்டாக பாபக்கிரகங்கள் ௩, ௬, ௧௧, இவற்றில்நிற்க யாத்திரை போவது—எ - று. (எ)

யாத்திரைக்கு நட்சத்திரங்களிற் புசிப்பவை.

உழுந்தெட்டயிர்யவையூனுதிரம்புடோனெய்பாம்பூனெட்
கொழுஞ்சோறுசாமைதினைவண்ணவோதனநெல்லிகொட்டே
செழும்பால்கிழங்குநீரத்தநெற்றேன்குளம்பாலிரத்த (ன்
மெழும்பயறைப்பசியாதிநாளுக்குண்டுபோகென்பரே.

(எ - து.) அவசியம் யாத்திரைபோமிடத்து அசுவினிமுத லிரேவதியீறுக உஎ-நாளுக்கும் உஎ-பதார்த்தத்தைப் புசித்துப்போகலாம். அவையாவன, உழுந்து எள்ளு தயிர் யவை மாமிசம் இரத்தம் புடோல் நெய் சர்ப்பமாமிசம் எள்ளு சுத்தான்னம் சாமைச்சோறு தினைச்

* ஆயம் அயம்; குறுக்கல் விகாரம்.

சோறு சித்திரான்னம் நெல்லி கொள்ளு தேன் பால் கிழங்கு தண்ணீர் தருப்பணம் நெல்லு தேன் சர்க்கரை பால் இரத்தம் பயறு இவற்றைப்புசித்தல் பரிசித்தல் நினைத்தல் செய்துபோகலாம்—எ - று.

யாத்திரைக்குந் திதிவாரங்களிற் புசிப்பவை.

எருக்கரிசிநெய்நெற்சோறுபொன்னீர்மதுத்தானியநீர்
கருத்துறுகோமயம்பாலவிகன்னல்நற்பால்பருப்பு
நிறைத்ததிதிக்குக்கிழமைக்குப்பாறயிர்நீர்பருப்புப்
பொரிப்பலினக்கறிபாற்சோறுபிண்ணாக்கருந்திப்புகே.

(எ - து.) பிரதமை முதலிய பதினைந்து திதிக்கும் எருக்கிலை அரிசி நெய் நெல்லு சோறு பொன்னீர் தேன் தானியம் சலம் கோமயம் பால் பாற்சோறு கருப்புக்கட்டி பால் பருப்பு இவற்றைத் தின்று யாத்திரை போவது. ஞாயிறு முதலிய கிழமைக்கு பால் தயிர் சலம் பருப்பு பொரித்தபலவினக்கறி பாற்சோறு பிண்ணாக்கு இவற்றைத் தின்று போவது—எ - று.

(கூ)

யாத்திரைக்குச் சுபாசுப சுவாசம்.

நாசியின்மீதெழுகாலிடைநன்றுதீதாகும்வலம்
வசிட்டார்பார்க்கவரங்கிராப்பாரத்துவாசிகட்குங்
காசிபர்தங்கட்கெதிர்வெள்ளியிலென்பகண்ணன்கழல்
பேசிவணங்கிப்பின்யாத்திரைபோகப்பெருநலமே.

(எ - து.) யாத்திரை போமிடத்து சொன்ன நாளின் முகூர்த்தத்து முன்பாகக் கிழக்கு நோக்கியிருந்து சுவாசத்தை விட்டால் அமுதபாகமாகிய விடையிலே யியங்குமாகில் யாத்திரைபோக மிகவு நன்று. விஷபாகமாகிய பிங்கலையிலே யியங்குமாகில் யாத்திரைபோதல் தீது. எதிர்வெள்ளியு மிடக்கண்வெள்ளியு மாகாது. பிராமணரில் வாசிட்டர் பார்க்கவர் அங்கிராதர் பாரத்துவாசர் காசிபர் இந்த வர்க்கத்தார் போமிடத்துச் சுக்கிரதோஷமில்லை, பிரியாம். அல்லாத இருஷி கோத்திரத்தார்க்கும் மற்றுமுள்ள மூன்று வருணத்தாருக்கு முண்டு. பரம குருவான நாராயணனை வணங்கி நமஸ்கரித்துப் போகின் மிகவு நன்மும்—எ - து.

(கo)

இதுவுமது.

பதிபுக்கவொன்பான்தினத்தினிற்போதல்பதியைவிட்ட
விதிபுக்கவொன்பான்தினத்தினின்மேவுதன்மிக்கபொல்லாங்
கதின்மிக்கமாதருமாண்டுமெவ்வண்ணமாகாபுகரோ
னெதிர்புக்கவோருர்க்கிசைத்தாரினிதென்றினவுளையே.

(எ - து.) ஒரூர்க்குப்புகுந்த வொன்பதாநாட் புறப்படலாகாது. புறப்பட்ட வொன்பதாநாள் தனதூரிலும் வரலாகாது. ஒன்பதாமாத முமாண்டு மப்படியே தவிரப்படும். எதிர்வெள்ளியு மிடக்கண்வெள் ளியு மோரூர்க்கில்லையாம்—எ - று. (கக)

ஸ்திரீயாத்திரை.

கதிரோன்குடங்குளிர்கன்னிசேர்நாளுங்கடவுள்குரு
விதியொளிகுன்றியவெள்ளியும்வெள்ளிமால்வாரங்களு
மெதிர்வெள்ளியுமுத்திரமுமுற்பக்கமுமெய்துகாலம்
மதியின்றிமாதர்கடாம்வழிபோகப்பகர்ந்திலரே.

(எ - து.) ஆதித்தியன் கும்பம் கர்க்கடகம் கன்னியில் நிற்குமாத மும் குரு சுக்கிரனத்தமன காலமும் வெள்ளி புதன்கிழமையும் எதிர் வெள்ளியும் உத்திரமும் பிரதமையும் தனது நாயகனின்றி ஸ்திரீகள் யாத்திரை போகலாகாது—எ - று. எதிர்வெள்ளி யறியுமிடத்து மே டஞ் சிங்கந் தனு கிழக்கு, இடபங் கன்னி மகரந் தெற்கு, கர்க்கடகம் விரிச்சிகம் மீனம் வடக்கு, இந்தராசிகளிலே நவக்கிரகங்களு நிற்குங் கால மிந்தத் திக்கிலே நோக்கமென்றறிக—எ - று. (கஉ)

கோயாத்திரை.

தலைநாண்முதலைந்துகேட்டைசதயம்விசாகமக
முலையாதவோணமிரேவதிபூரமூன்றுத்திரங்கள்
சிலைமீன்கலையாழ்மறிதேளெழத்திங்கள்சீவன்வார
நிலையார்புகரெட்டினிற்கக்கோயாத்திரைநேர்ந்தனரே.

(எ - து.) அசுவதிமுத லைந்துநாள் கேட்டை சதயம் விசாகம் மகம் திருவோணம் இரேவதி பூரத்திரயம் உத்தித்திரயம் இந்நாட்களி லே தனு மீனம் மிதுனம் மேடம் விரிச்சிகம் இவ்விராசிக ளுதயமாகத் திங்கள் வியாழவாரோதயங்களிலே சுக்கிரன் அ-ம் இடத்துநிற்கப் பசு முதலிய சதுர்ப்பாத யாத்திரை போகலாம்—எ - று. (கங)

சலயாத்திரை.

நாரணனத்தம்பனைமான்றலைபுள்ளுநாவாய்சோதி
தாரணிபாய்மாவிவற்றிற்சரமெழத்தக்ககோட்க
ளோரணியாகவியாத்திரைபோகவெடுத்தவற்றி
னீரணியாத்திரையாமென்றனர்பொன்னிரைவனையே.

(எ - து.) திருவோணம் அத்தம் அனுஷம் மிருகசீரிடம் அவிட் டம் இரேவதி சோதி அசுவதி இந்நாட்களிலே சரராசியுதயமாகச் சுப

க்கிரகங்க ளன்றியிருக்கச் சுபயாத்திரைக்குச் சொன்ன வகையும் பார்த்துச் சுபயாத்திரைபோவது—எ - று. (௧௭)

### கிணறு குளங்கல்ல:

நல்லவர்வாரநற்பக்கமுடைகுளமத்தநாவாய்
சொல்லுமகம்பனைமான்றலைசோனைசுண்ணங்குருத்தேர்
வல்லுறுமுத்திரமூன்றேறுமீன்சாடிமானண்டினிற்
கல்லுக்கிணறுகுளஞ்சுத்திவெட்டிற்கனங்குழையே.

(எ - து.) சுபவாரமுஞ் சுபதிதியுங் கூடினபூராடம் அத்தம் இரேவதி மகம் அனுஷம் மிருகசீரிடம் திருவோணம் சதயம் பூரம் உரோகிணி உத்திரத்திரயம் இந்நாட்களிலே இடபம் மீனம் கும்பம் மகரம் கர்க்கடகம் இவ்விராசிகளுதயமாக அட்டமசுத்தியுண்டாகக் கிணறு குளங் கல்லலாம்—எ - று. (௧௮)

ஈசன்பிரமன்வருணன்புரந்தரன்சோமனென்ற
வாசைகடன்னிற்கிணறுகுளங்கல்லநன்றல்லவை
வாசங்கமழ்பூங்குழன்மடவாய்வன்றுயருடைத்தாய்
நாசம்வருமென்றுநன்னூலுணர்ந்தவர்காட்டினரே.

(எ - து.) ஈசர்க்கும் * அகத்தினுக்கும் வடகிழக்கும் நடுவும் மேற்கும் கிழக்கும் வடக்கும் என்று சொல்லிய திக்குக்களிற் கிணறு குளங் கல்ல நன்று. அல்லாத திக்குக்களிற் கல்லினால் வியாதி பீடை தனச்சேதம் மரணபயமுண்டாம்—எ - று. (௧௯)

### ஓதுவமது.

அதிபெறுமுச்சத்துஞ்சத்துமர்க்கனிருந்துதிப்பப்
பதிபெறுயோகம்பருப்பதம்பாதாளமென்பரேரி
நதிகரைகட்டல்குழித்தனன்றுய்வளையாயடைவே
யதியல்லயாழ்கடலாமென்றறிஞரறைந்தனரே.

(எ - து.) ஆதித்திய னுத்தியுச்ச பாகையிலே நிற்ப மேடத்துப் பத்தாம் பாகமுதயமாகிற் பருப்பதயோகமாம். இதில் ஏரிகுளங்கிணறு ஆறு கரைகட்டமலைபோல வளர்ந்துநிலைக்கும். ஆதித்தியனீசத்து நிற்ப துலாத்துப் பத்தாம்பாக முதயமாகிற்பாதாளயோகமாம். இதிலே கிணறு குளமேரியாறு கல்லச் சமுத்திரம்போலப் பெருகும்—எ - று.

* அகத்தினுக்குப் பிரமத்தானமாக வென்பாருமுளர்.

## கொள்ளக் கொடுக்க.

கலஞ்சகடோணமுறமிருபூசங்களிறுசுண்ண
நலமபரிபூரநரிப்புறம்விற்கேட்டையுத்திரங்கள் [ன்றே
குலஞ்செங்கைகொண்டுகொடுத்தற்கிருத்தையொழித்துமீ
ளுலந்தயாமேறரிகோனல்லவாரோதயமுறுமே.

(எ - து.) இரேவதி உரோகிணி திருவோணம் விசாகம் புநர்பூசம் பூசம் அத்தம் சதயம் அசுவதி பூரம் மிருகசீடம் மூலம் சேட்டை உத்திரத்திரயம் திருவாதிரை இந்நாட்களிலே இருத்தை யொழிந்த திதிகளிலே மீனம் விரிச்சிகம் மிதுனம் இடபம் சிங்கம் துலாம் இவை யுதயமாகச் சுபவாரோதயங்களிலே கொள்ளக் கொடுக்க நன்றும்—எ - று. (கஅ)

## இதுவுமது.

முறமகம்பூரங்கள்சித்திரைமூலம்பரணியாரல்
செறியரவம்வெள்ளிசேய்முற்றிதியிலுவாவிற்றனம் [ருளும்
பிறர்கைக்கொடேற்கொடுக்கிற்பெருஞ்செல்வமுங்கைப்பொ
பறிபடுமென்பிறர்கைப்பொருள்கொள்ளிற்பலன்பெரிதே.

(எ - து.) விசாகம் மகம் பூரத்திரயம் சித்திரை மூலம் பரணி கார்த்திகை ஆயிலியம் இந்நாட்களில் வெள்ளி செவ்வாய் வாரம் பிரதமை உவாக்களில், அருத்தங் கைவிடலாகாது. கைவிடி லுள்ளபொருளும் போம். பிறரிடத்திற் றனங்கொள்ளுகில் மிகவும்வந்து கூடும்—எ - று. (ககூ)

## இராசபிரபு தெரிசனம்.

கேட்டையராவரன்பூரங்களோடுகிளவனல்ல
விட்டுநன்னாளினற்கோளங்சகவாரமெட்சிரண்ண
நாட்டுந்திரமுபயம்மெழுகாவிரறுங்குழலாய்
சூட்டும்பெரியோர்களைக்காணலாமென்றுசொல்லினரே.

(எ - து.) கேட்டை ஆயிலியம் திருவாதிரை பூரத்திரயம் பரணி கார்த்திகை இவையொழிந்த சுபநாட்களிலே சுபவாரோதயாங்சங்களிலே திராசி யுபயராசி யுதயமாக இராசபிரபு தெரிசனம் பண்ணுவது—எ - று. (உ0)

யாத்திரைப்படலமுற்றிற்று.

ஆகக் கலித்துறை சுகஎ,

---

# அரசர்வினைப்படலம்.



முடிசூட்ட.

உத்திரமூன்றுருள்பூசகாவாய்கழைகேட்டையோண
மத்தம்பரிபனைமான்றலைகன்றரியாடிடபஞ்
சத்தக்தருக்தேட்டடியுத்தமங்குளிர்மீன்சிலைசான்
மத்திமமன்னவர்மாமுடிசூட்டவகுத்தனரே.

(எ - று.) உத்திரத்திரயம் உரோகிணி பூசம் இரேவவதி புநர்பூசம் கேட்டை திருவோணம் அத்தம் அசுவதி அனுஷம் மிருகசீரிடம் இந்நாட்களிலே சிங்கம் மேடம் இடபம் விரிச்சிகம் மிதுனம் இவ்விராசிக ளுத்தமம். கர்க்கடகம் மீனம் தனு கும்பம் மத்திமம். இவற்றில் இராசாக்கள் பட்டாபிஷேகம் பண்ணுவது—எ - று. (க)

இதுவுமது.

வெள்ளிகதிர்மதிமால்குருவேந்தர்முடிபுனைதற்
கொள்ளியவாரமுதயமென்றூர்சுத்தியேழுமெட்டுந்
தள்ளிவிதித்தனர்செப்பியபஞ்சாங்கஞ்சீர்மைபெறக்
கள்ளவிழ்பூங்குழலாய்கலைவல்லவர்காதலித்தே.

(எ - று.) வெள்ளி ஞாயிறு திங்கள் புதன் வியாழம் இவர்கள் வாரோதயங்களிலே எ, அ, இவ்விடங்கள் சுத்தியாய்ப் பஞ்சாங்க யோக நன்றாக இராசக்கள் பட்டாபிஷேகம்பண்ணுவது—எ - று. ()

திருவாணீடெழுத்திட.

முறைபடமோனியிலாடியின்மூக்கணாளினற்கோள்
செறிவுடனோக்கச்சிறப்புடையெட்சியிற்சேயிழையாய்
நிறைபுனராவிமறையோர்வழுத்தநெறிமுறையே
யறைகழன்மன்னர்திருவாண்டெழுத்திடலாமென்பரே.

(எ - று.) ஆனி ஆடிமாதத்திலே திருவாதிரைநாளிற் சுபக்கிரக நோக்குண்டாக வர்த்தவமூராசி யுதயமாகப் பிராமணரா லபிஷேகம் பண்ணி யாசிர்வசனம்பெற்று இராசாக்கள் திருவாண்டெழுத்திடுவது—எ - று. (ங)

வாகனமேற ஆயுதம்பயில.

ஆதிமகம்பனையுத்திராமூன்திருபூசமத்தஞ்
சோதியநுவைமகயிரமாரோணிபண்டிசுபர்
திதாசனிகுசன்வாரமுமில்அஞ்சிவிகைமுத
லோதியவாகனமேறவுமாயுதமோதவுமே.

(எ - து.) அசுவதி மகம் அனுஷம் உத்திரத்திரயம் புநர்பூசம் பூசம் அத்தம் சோதி சித்திரை மிருகசீரிடம் திருவோணம் உரோகிணி இரேவதி இந்நாட்களிற் செவ்வாய் சனியொழிந்த வாரத்திலே மேடம் விரிச்சிகம் மகரம் கும்பம் இவையொழிந்த ராசிகளிலே சிவிகை முதலியவாகனமேறவும் ஆயுதம்பயிலவும்பெறும்—எ - று. (௬)

யுத்தயாத்திரை.

உரைபுனையுத்திரமூன்றைப்பசியத்தமோணம்புள்ளு
நிரைபனைதோணிமகயிரஞ்சித்திரைநீடுபூசந்
திரிவுதயம்பெறநற்றிதிவாரஞ்சிறப்புமிக
வரசர்தண்டேவுதற்காமென்றுவைத்தனனந்தணனே.

(எ - து.) உத்திரத்திரயம் அசுவதி அத்தம் திருவோணம் அவிட்டம் அனுடம் இரேவதி மிருகசீரிடம் சித்திரை புநர்பூசம் பூசம் இந்நாட்களிலே திரராசியில் நல்ல திதிவாரோதயங்களிலே அரசர் யுத்தயாத்திரைசெய்வது—எ - று. (௭)

யுத்தஞ்செய்ய.

செருச்செயநாட்பரிசித்திரைகேட்டைசதயஞ்செங்கை
மருத்துமுப்பூரங்கலமராமூலமகம்பரணி
யிருட்பெறுபக்கத்திருத்தைசயைவிட்டிசேயிரவி
குருச்சனிவாரமிராசியுங்கால்களுங்கூறுவரே.

(எ - து.) யுத்தஞ்செய்புமிடத்து அசுவதி சித்திரை கேட்டை சதயம் திருவாதிரை சோதி பூரத்திரயம் இரேவதி ஆயிலியம் மூலம் மகம் பரணி அபரபக்கத் திருத்தை திருதியை அட்டமி திரயோதசி விட்டிக்கரணம் செவ்வாய் ஞாயிறு வியாழம் சனி இவர்கள் வாரோதயங்களிலே யுத்தம்பண்ணுவது—எ - று. (௮)

மானாவி.

ஆனாதவைப்பசிகார்த்திகையில்வளரட்டமியிற்
றுஞ்ந்துவாதசியிற்றக்கமூர்த்தத்துச்சந்திரனார்
மீனுடுமுத்திராடத்தெழமிக்ககோணோக்குப்பெற
மானாவிகொள்பகளிற்றுக்கும்வாசிக்கும்வாணுதலே.

(எ - து.) ஐப்பசி கார்த்திகைமாசத்துப் பூருவபக்கத் தட்டமியிலாதல் துவாதசியிலாதல் சுபமுகூர்த்தத்து உத்திராடத்திலே சந்திரோதயமாகச் சுபக்கோள்நோக்க யானைகுதிரை மானாவிகொள்வது.()

### கஜசாந்தி.

மகமிருபூசமுன் றுத்திரமாயனுட்சித்திரைபுட்
பகடுவிளக்குப்பனைபரிநாவாயிற்பைம்பொன்வெள்ளி
சுகமதியாலெட்சிவாரத்திராசியிற்சுத்தமெட்டின்
மிகால்லபக்கத்திவேழகன்மங்கள்விளம்பினரே.

(எ - று) மகம் புநர்பூசம் பூசம் உத்திரத்திரயம் திருவோணம் சித்திரை அவிட்டம் அத்தம் சோதி அனுஷம் இரேவதி அசுவதி இந்நாட்களிலே வியாழம் வெள்ளி திங்கள் புதன் இவர்களுடைய வாரமிராசியக்சமுதயமாக இவர்கள் நோக்குப்பெற அட்டமசுத்தியுண்டாக நல்ல திதியிலே யானைக்குச் சாந்திபண்ணுவது—எ - று. (அ)

### அசுவசாந்தி.

ஐப்பசிபுட்பனைநாவாய்முறமத்தமாரல்கழை
செப்பருமான் றலைசோதியிந்நாளித்திரமுதிப்பத்
துப்புறுபக்கத்துநற்கோளெழத்தூரகங்களினுக்
கொம்புறுகன்மங்கள்யாவுஞ்செய்கென்றனரொண்ணுதலே.

(எ - று.) அசுவதி அவிட்டம் அனுஷம் இரேவதி விசாகம் அத்தம் கார்த்திகை புநர்பூசம் மிருகசிரிஷம் சோதி இந்நாட்களிற் றிராராசியுதயமாகப் பூருவபக்கத்து நல்ல திதிகளிலே சுபக்கோணேக்கக் குதிரைக்குச் சாந்திபண்ணுவது—எ - று. (கூ)

### இதுவுமது.

ஞாயிறுசோதியினண்ணியநாட்களினன்குணர்ந்து
தூயவர்சோதிசம்பாதமென்னூர்தொக்கவான்பிணியா
லோய்வுறுமெல்லாவுயிர்களுமாங்கவற்றுத்துயர்நோய்
பாய்பரிமாக்கொள்ளுமங்கதற்குச்சாந்திபண்ணுகவே.

(எ - று.) ஆதித்தியன் சோதியிலேநிற்குநாள் சோதிசம்பாதயோகமாம். அக்காலத்திலே சகலபிராணிகளுக்கும் வியாதியுண்டாம். இவற்றின்மிகவுங் குதிரை நோய்கொள்ளும். இதற்கு அவரவர்சாத்திரஞ் சொன்னபடியே சாந்தி பண்ணுவது—எ - று. (க0)

அரசர்வினைப்படல முற்றிற்று.

ஆகக் கலித்துறை சஉஎ.

---

## நல்வினைப்படலம்.

### வாஸ்துநிலை.

பங்குனியாதிவலமாகமுத்திங்கள்பச்சிமத்தே
தங்குந்தலையாயிடங்கிழ்ப்படவாத்துமன்சரிக்கு
மங்கவனனத்தேவாயில்கொள்ளுமவன்கிடக்கை
துங்கமுகடிடுமோங்கவனுந்திபிற்றாணடுமே.

(எ - து.) வாத்துபுருஷன் நிலையைச்சொல்லுமிடத்து பங்குனி முதன் மூன்றுமாதமும் மேற்கேதலையும் கிழக்கேகாலும் வடக்கேமுக முமாய்க்கிடக்கும். ஆனிமுதன் மூன்றுமாதமும் வடக்கேதலையுந் தெ ற்கே காலுங் கிழக்கேமுகமுமாய்க்கிடக்கும். புரட்டாசிமுதன் மூன்று மாதமுங் கிழக்கேதலையு மேற்கேகாலுந் தெற்கே முகமுமாய்க்கிடக் கும். மார்கழி முதன்மூன்றுமாதமுந் தெற்கேதலையும் வடக்கேகாலு மேற்கே முகமுமாய்க்கிடக்கும். இவன் கிடந்த கிடைக்கு முகமிட்டு இவன் முகத்துக்குநேரே வாயிலும்விட்டு வயிற்றிலேகெற்பம்வைத் தல் தூணட்டுதல் செய்வது எ-து. இந்தமாதங்கள் சவுரமானவகை யாற் கொள்ளப்படும்—எ - று. (க)

### வீடுகட்டக் குடிபுக விலக்கியகாலம்.

வில்லுறுகன்னிதடிமீனில்வெய்யவன்மேவுநாளு
மில்லுடையாள்பிள்ளையுண்டாயிருப்பினும்வாத்துவிடச்
சொல்லிலர்மந்திரிசுங்கனொழிகுன்றிற்றீதிற்புகப்
புல்லுறுமாதங்குளிர்சால்பொறிபெண்புகலிலரே.

(எ - து.) ஆதித்தியன் தனு கன்னி மிதுனம் மீனம் இவையி னிற்குங் காலமும் தன்னுடைய ஸ்திரீ கர்ப்பமுண்டாயிருக்குங் கால மும் குரு சுக்கிர னத்தமன காலமும் கிருகாரம்பம் செய்யக்கூடாது. குடி புகுமிடத்து கர்க்கடகம் கும்பம் தனு கன்னி இந்நாலு மாதமுந் தவிரப்படும். அல்லாத வெட்டுமாதமுங் குடிபுகலாம். இதி லுத்தரா யணமாத நன்று. தெட்சணாயனமாத மத்திமம்—எ - று. (உ)

### மனைப்பொருத்தம்.

வாத்துவுக்கிடாம்வியனுமுழத்தின்மனையெடுக்கப்
பார்த்திடலாயம்பெருக்கவியங்குறைபக்கம்வாரந்
தீத்திறமன்றிவியன்யோனிநத்தினமும்பொருந்தக்
கோர்த்தனராங்சகமாறேழெட்டொன்றுங்கொடிதெனவே.

(எ - று.) வாத்து புருடனுக் கேடாக வொற்றித்த முழத்திலே மனைகோலப்படும். மனை யெடுக்குமிடத்து ஆயமிருந்து வியங்குறைந்து ஒற்றித்த யோனியும் நாட்பொருத்த முண்டாகத் திதியும் வார முஞ் சுபமாக ௬, எ, அ, க, இவை யொழிந்த அஞ்சத்திலே கொள்வது—எ - று. (௩)

## கிரகசத்தமவர்க்கம்.

அகலத்தைமூன்றினுமாயத்தையெட்டினுமாக்கிவைத்தாங்
கிகமோத்தவெட்டாலுமுவொன்பதினாலுமீந்தநிலை
நிகரொத்தயோனியுநாளுமாநீளத்தைநாலின்மாறிப்
பகரொத்தவொன்பதிற்கியநவாஞ்சகம்பான்மொழியே.

(எ - று.) அகலத்தை மூன்றிற்பெருக்கி யெட்டிற்கிய யோனியாம். நீளத்தை யெட்டிற் பெருக்கி யிருபத்தேழுக்கிய நாளாம். சுற்றளவை நாலிற் பெருக்கி யொன்பதுக்கிய நவாஞ்சகமாம்—எ - று. ()

## இதுவுமது.

ஆயத்தையெட்டினுமொன்பதினுந்தாக்கியாறிரண்டிற்
கேயுற்றபத்திற்குமீந்திடவாயம்வியங்களென்பர்
தேயுற்றசுற்றொன்பதெட்டாற்பெருக்கிச்செழுமுப்பதி
னேயுற்றவேழிற்கழிப்பத்திதிவாரமென்றனரே.

(எ - று.) சுற்றளவை யெட்டிற் பெருக்கிப் பன்னிரண்டுக்கிய ஆயமாம். இதை யொன்பதிற் பெருக்கிப் பத்திற்கிய வியமாம். சுற்றளவை யொன்பதிற் பெருக்கி முப்பதுக்கியப் பக்கமாம். இப்படி மனைக்கு * எழு பொருத்தமு மறிவது—எ - று. (ரு)

## கிருகாரம்பம்.

பொருந்துமகமத்தம்யாழுத்திரங்கள்புநர்தம்பூசந்
திருந்துசகடம்பனிமான்றலைதிருவோணங்கல
மிருஞ்சித்திரைசோதிநன்றரிதேட்குடமேறுத்தமம்
வருந்துமுபயங்கண்மத்திமமாமனைகோலுதற்கே.

(எ - று.) கிருகாரம்பஞ் செய்யுமிடத்து மகம் அத்தம் அசுவதி உத்திரத்திரயம் புநர்பூசம் பூசம் உரோகிணி அனுடம் மிருகசீரிடம் திருவோணம் இரேவதி சித்திரை சோதி இக்காளில் சிங்கம் விருச்சிகம் கும்பம் இடபம் இவ்விராசி யுத்தமம். உபயராசி மத்திமமாம்—எ - று. (௬)

* மனைக்குப் பத்துப் பொருத்தஞ் சொல்வாரு முளர்.

பிரதமேட்டிகை.

நாளுங்கரணமும்யோகமும்வாரமுநற்றிதியுங்
கோளுங்குணம்பெறமேன்முகநாளோரைகூட்டமுற
வாளுமுயிரினுக்கோரெட்டிராறிலமர்ந்துநிற்குங்
கோளின்றிவாத்துவகுப்பநன்றாமென்குயின்மொழியே.

(எ - து.) பஞ்சாங்க யோகமுங் கிரகங்களு நன்முக வூர்த்துவ முக நாளிலே யூர்த்துவமுகராசி யுதயமாக அ, கஉ, இவ்விடஞ் சுத்தியாக வாத்துவுக்குப் பிரதமெட்டிகையிடுவது—எ - று. (எ)

தம்பத்தாபனங்கதவு.

சந்திரனெட்சியுங்கால்களுநீத்தனர்தம்பநாட்டச்
சிந்தனைசெய்துதிரத்தையடைத்தார்செறிகதவிற்
குந்துமகமுருளுத்திரமூலஞ்சதயஞ்சயை
மந்தன்கிழமையுமந்திரியெட்சியும்வைத்தனரே.

(எ - து.) அபரபக்கத்துச் சந்திரனுதயமும் சந்திராங்ச மொழிந்த சுபக்கோ ளுதயம்பெறத் திரராசி யுதயமாகத் தம்பநாட்டுவது. மகம் உரோகிணி உத்திரம் மூலம் சதயம் திருதியை அட்டமி திரயோதசி இந்நாளினும் பக்கத்தினும் சனிக்கிழமையினும் வியாழ னுதயாங்சத் திரேக்காணங்களினுங் கதவு நிலைநாட்டுவது—எ - று. (அ)

வாயிற்பொருத்தம்.

ஏறுதடிகுளிருத்தாக்கீழரியேமைதுலை
வீறுறுகீழ்த்திசைதெற்காம்விரிச்சிகம்வின்மகரஞ்
சீறியதெற்குடன்பச்சிமஞ்சால்கயல்செச்சைகுடக்
காறியவுத்தரம்வாயில்விடுந்திசையாரணங்கே.

(எ - து.) இடபம் மிதுனம் கர்க்கடகம் இவ்விராசிகளிற் செனித்தபேருக்கு வடக்குவாயில் கிழக்குவாயிலும், சிங்கம் கன்னி துலாம் இவ்விராசிகளிற் செனித்தபேருக்குக்கிழக்குவாயில் தெற்குவாயிலும், விரிச்சிகம் தனு மகரம் இவ்விராசிகளிற் செனித்தபேருக்குத்தெற்குவாயில் மேற்குவாயிலும், கும்பம் மீனம் மேடம் இவ்விராசிகளிற் செனித்தபேருக்கு மேற்குவாயில் வடக்குவாயிலும் விடுவது—எ - று. ()

கிருகப்பிரவேசம்.

பூசமிரண்டுமூன் றுத்திராவாய்புரவியத்தம்
பேசுறுசோனை * மகாபிரம்பெண்ணைபெருஞ்சகட

* மகயிரம்-அனுடம்.

மாசில்விளக்குமகம்புள்ளிருத்தையாறெட்டொழித்துத்
தேசுறுயோகத்துநல்லோர்குடிபுகச்செப்பினரே.

(எ - து.) புநர்பூசம் பூசம் உத்திரத்திரயம் இரேவதி அசுவதி அத்தம் திருவோணம் மிருகசிரிஷம் அநுஷம் உரோகிணி சோதி மகம் அவிட்டம் இந்நாட்களில் இருத்தை சஷ்டி அஷ்டமி ஒழிந்த பக்கத்திலே பஞ்சாங்கயோக நன்றாகக் குடிபுகுதலாம்—எ - று. (கO)

## இதுவுமது.

நிலையானவோரையினித்தனர்தேளையுபயங்களைத்
தலையாகவைத்தனர்தக்கவிடையஞ்சகத்தவோரை
நலமாகுநற்கோளுறுதேளுநன்றாங்குடிபுகுதற்
குலையாதவாத்துவுக்குச்சொன்னசுத்தமுமோதுவரே.

(எ - து) குடிபுகுமிடத்து விரிச்சிக மொழிந்த திரராசியு முபய ராசியுமாம். அல்லாதராசி யிடபாங்சகங்களும் சுபக்கோள் நிற்கின்ற விரிச்சிகமுமாம். அ, கஉ, இவ்விடஞ் சுத்தியாகக் குடிபுகுதலாம்—எ - று. (கக)

## தேவகிருகாரம்பம்.

சியங்துலைதெறுக்காலிற்கதிருறத்தேவர்தங்கட்
கோய்வுறுகோவிலகத்துவங்கொள்கவஞ்சாதியாகத் [ப்
தேய்வின்முழத்தின்முன்செப்பியநாட்களிற்கோவில்செய்ய
பாய்கலைமீன்மறிசேதடிமாதம்பகர்ந்தனரே.

(எ - து.) சிங்கம் துலாம் விருச்சிகம் இவற்றி லாதித்த னிற்க முன்பு கிருகாரம்பத்துக்குச் சொன்னநாளினும் இராசியினும் இராசாவுக்கும் ஊருக்கும் யசமானுக்கும் அநுகூலமான திவசத்திலே கோயிலுக்குப் பூமிப் பரிசைஷயும் பண்ணிக் கருஷணையுமிட்டு அகத்துவம் பறிப்பது. சிற்பசாத்திரஞ் சொல்லுமிறபடியே கோவில் செய்வது. அப்படிச் செய்யுமிடத்து ஐந்தமுழ முதலாக எ, கூ, கக, இப்படியா யீபவர்க்கித்து கொள்ளப்படும். ஐந்து முழத்துக்குக் குறையச் செய்யுமிடத்து ஒன்றேகால் குறைத்து மூன்றே முக்காலிலே கொள்ளலாம். இதிற் குறையுமிடத்து இராசாவுக்கும் இராச்சியத்துக்கு நன்றல்ல. எழுமொன்பதுங் காலொழிய அரையு முக்காலுங் கொள்ளப்படும். இப்படி முழ நிச்சயித்து ஆயம்வியம் அநுகூல முண்டான முழத்திலே விரியக்கொண்டு அகத்துவம் பிரித்து மணலு நீரும் விட்டு அத்திபாரத்தி லிருத்தித் தலமடம் பிறப்பித்துச் சங்குத்தாபனம் பண்ணி

கிழக்கு மேற்கிரேகையும் தெற்கு வடக் கிரேகையு மறிந்து வாசலி லே பிரத மெட்டிகையிடுவது. இடமிடத்து மகரம் மீனம் மேடம் இடபம் மிதுனம் இவற்றி லாதித்திய னிற்குங் காலம் பிரதிட்டைக்குச் சொன்ன நாளினு முகூர்த்தத்தினும் பிரதமெட்டிகையிட்டு விமானஞ் செய்வது. இம்மாதங்களிலே மூர்த்துஷிகையு மிட்டுத் தாபிப்பிரதிட்டையும் பண்ணுவது—எ - று. (கஉ)

## நவபூஷணம்.

அர்த்தமகப்பிரமாதியத்தஞ்சித்திரையனுடம்
விர்தகமைழகுருத்தேர்விற்றடிமீன்விடைமகளிர்
கந்தைவளர்ச்சியுநன்றுயவாரத்துப்பூணணிய
மைந்தர்க்குநன்றுமணவணிநாணன்றுமங்கையர்க்கே.

(எ - து.) இரேவதி மிருகசீரிஷம் அசுவதி அத்தம் சித்திரை அனுஷம் புனர்பூசம் பூசம் உரோகிணி இந்நாட்களிலே தனு மிதுனம் மீனம் இடபம் கன்னி இந்த ராசிக ளுதயமாகப் பிரதமை சஷ்டி ஏகாதசி பஞ்சமி தசமி பூரணையிலே சுபவாரத்துப் புருஷராபரணம் பூணலாம். விவாகத்துச் சொன்ன நாளினு முகூர்த்தத்தினும் ஸ்திரிகளாபரணம் பூணலாம்—எ - று. (கங)

## நவவஸ்திரம்பூண.

உத்திரமூன்றுகலமிருபூசம்பரியுருடே
ரத்தமுதலேந்துநன்றுடரிவிற்றேண்மீன்சனிசேய்
தத்தங்கிழமையிருத்தைதவிர்த்தாறிடஞ்சுத்தியிற்
புத்தப்புதுக்கலிங்கத்துடைநன்றென்பர்பூங்கொடியே.

(எ - து.) உத்திரத்திரயம் இரேவதி புனர்பூசம் பூசம் அசுவதி உரோகிணி அத்தம் சித்திரை சோதி விசாகம் அனுஷம் இந்நாட்களிலே மேடம் சிங்கம் தனு மீனம் இவை யொழிந்த ராசிகளிலே சனி செவ்வாய் இருந்தை யொழிந்த பக்கங்களிலே சுடீம் இடஞ் சுத்தியாகப் புதுப்புடவை யுடுப்பது—எ - று. (கச)

## உபதேசம்.

மாசிபெண்மார்கழியாடியுநீத்தொளிமந்திரிகள்
வீசியகாலத்தனுஷ்விளக்குருளத்தமும்மீன்
பூசமிரண்டுமூன்றுத்திரஞ்சோணைபுட்கேட்டைமக
மீசனருவைகலமுபதேசத்திற்கேய்ந்தனவே.

(எ - று.) சாந்திரமாதங்களால்வந்த மாசி புரட்டாசி மார்கழி ஆடி இவை யொழிந்த மாதங்களிலே குரு சுக்கிர னத்தமனமில்லாத காலத்தில் அநுஷம் சோதி உரோகிணி அத்தம் மிருகசீரிஷம் புநர்பூசம் பூசம் உத்திரத்திரயம் திருவோணம் அவிட்டம் கேட்டை மகம் திருவாதிரை சித்திரை ரேவதி இந்நாட்களிலே மந்திரோபதேசம் பண்ணுவது—எ - று. (கரு)

இதுவுமது.

உவாபதினன்கொன்பதட்டமிசேய்சனியும்மொழிந்தாங்
கவாவிற்றிரத்தையகற்றுவித்தட்டமசுத்திபெறத்
திவாவினிற்சென்மத்துஞ்சங்கிரமத்துங்கதிர்மதியை
யவாவுற்றடத்துமுபதேசநன்றுமென்னுயிழையே.

(எ - று.) அமாவாசை பூரணை சதுர்த்தசி நவமி அட்டமி செவ்வாய் சனி திரராசி இவைகள் தவிர்ந்து அட்டம சுத்தி யுண்டாகப் பகற்காலத்திலே மந்திரோபதேசம் பண்ணுவது. சென்மத் திரயத்தும் சங்கிரமகாலத்தும் கிரகணகாலத்தும் மந்திரங்க ளுபதேசம் பண்ணவுஞ் சாதிக்கவுமாம்—எ - று. (கசா)

சதாபிஷேகம்.

அறுபத்திரண்டுபிறையெழுமையாண்டிலாயிரமாம்
பிறையெண்பதாண்டிறுமெண்டிங்களினும்பிறக்குமென்பர்
செறியுறநீக்கியகாலத்துஞ்சென்மத்துநேரிழையாய்
செறியுறுநாளிற்சதாவபிடேகஞ்செயுமென்பரே.

(எ - று.) ஆதித்திய கதியால் வந்த வாண்டைந்துக்குஞ் சந்திரோதயம் ௬௨, பிறைபுதிக்கும். அ௦, சவுரவாண்டு மெட்டு மாதமுஞ் சென்றவன் ௧௦௦௦-ம், பிறை காண்பன். ஆதலாலவன் புண்ணிய புருடன் சொர்க்கப் பிராத்தியாகும் பொருட்டு அவனுடைய சென்ம மாதஞ் சென்ம நட்சத்திரத்திலே சதாவபிஷேகம் பண்ணுவது—எ - று. (கஎ)

இதுவுமது.

திருவோணமத்தங்கலமகஞ்சோதிசெக்குத்திரங்க
ளுருபேர்வியன்றிதியொண்மதிவெள்ளிமாறும்பர்குருத்
தருமோரைவாரமுதயஞ்சதாவபிடேகத்திற்கு
மருவேறுபூங்குழலாய்நல்லவாமென்றுவைத்தனரே.

(எ - து.) முன் சொன்ன நாட்கழிந்தால் திருவோணம் அத்தம் இரேவதி மகம் சோதி சதயம் உத்திரத்திரயம் உரோகிணி இந்நாட்களிலே நல்ல பக்கங்களில் திங்கள் வெள்ளி புதன் வியாழன் இவர்களுடைய வாரோதயாங் சகங்களிலும் இவர்களுடைய ராசியான சுப லக்கினங்களிலும் அட்டமசுத்தி யுண்டாகச் சதாவபிடேகம் பண்ணுவது—எ - று. (கஅ)

## தயிலாப்பியங்கம்.

*திங்கட்புதன்சனிநன்றுத்திரங்கேட்டைசெங்கையோண
மங்கட்செனனங்களட்டமிநந்தைபன்னொன்கொடுவாக்
கீங்குற்றுவாதசிசங்கிரமங்கழித்தெண்ணெய்வார்க்க
வெங்கட்பிணியர்சிறார்விருத்தர்க்குவரைவில்லையே.

(எ - து.) யாவனொருவன் எண்ணெயிடுமிடத்துத் திங்களும் புதனும் சனியு நன்று. அல்லாதவாரங்களும் உத்திரம் கேட்டை திருவாதிரை திருவோணம் சென்மத்திரயம் அட்டமி பிரதமை ஷஷ்டி ஏகாதசி சதுர்த்தசி பூரணை அமாவாசை துவாதசி இராக்காலம் சங்கிரமகாலம் இவையொழிந்த திதி நட்சத்திரங்களிலே யிடுவது. நோயர்க்கும் பாலர்க்கும் விருத்தர்க்கும் வரைவில்லையாம்—எ - று. சுமங்கலஸ்திரிகளுக்குச் செவ்வாய் வெள்ளிவாரங்களா மென்பாருமுளர்—எ - று. (கசு)

## § இரணமோசனம்.

அனுடம்விதிபாதமுத்திரட்டாதியிருத்தையாசான்
சனிநன்குதயங்குளிகனோடங்சகஞ்சாற்றுமோனர
நனிமதியெட்சியினற்பகலாற்றீட்டுளவிரணங்
தனிசுடையோர்க்குக்கொடுத்திடலாமெனச்சாற்றினரே.

(எ - து.) அனுஷமாதல் வியதிபாதயோகமாதல் உத்திரட்டாதியாதல் இந்நாட்களுடனே யிருத்தைகளாதல் வியாழக்கிழமை சனிக்கிழமையாதல் குளிகனாதல் சனியங்சகம் மகரம் கும்பம் உதயமாதல் வரப் பூருவபக்கத்துச் சந்திரோதயமான காலத்துப் பகலிலே தனிசுவாங்கினபொருள் கொடுத்துச் சிட்டுக்கிழிப்பது—எ - று. (உ0)

நல்வினைப்படல முற்றிற்று.

ஆகக்கலித்துறை சசஎ.

---

* திங்களில் எண்ணெ யிடலாகா தென்பாருமுளர்; நூலாசிரியர் வைணவராகலின் திங்களில் எண்ணெயிடலாமென்றார்போலும்; இது சைவருக்குடன்பாடன்று.

§ இரணம் - கடன்.

# திவினைப்படலம்.

ஔஷதமுண்ணல்.

மருத்திற்பனையத்தமுன்மூன் றுமான் றலைபுள்ளுடனே
திருதிருபூசமுன் றுத்திரஞ்செக்குருள்சோணைநாவா
யிரும்பரிகன்னிசரங்களிருத்தைமுன்றுறேழெட்டும்
பொருத்தியசுத்திநன்றுஞ்சேபுகர்பொருந்தாவென்பரே.

(எ - து.) அனுஷம் அத்தம் சித்திரை சோதி மிருகசீரிடம் அவிட்டம் புனர்பூசம் பூசம் உத்திரத்திரயம் சதயம் உரோகிணி திருவோணம் இரேவதி இந்நாட்களிலே சராசியாதல் கன்னியாத லுதயமாக திருத்தைகளிலே க, ௬, எ, அ, இவ்விடஞ் சுத்தியாக ஔஷத முட்கொள்ள நன்றும். * செவ்வாய் வெள்ளி வாரோதாயங்சகங்களாகா —எ - று. (௧)

அரக்கர்வயித்தியம்.

அரவமொடாதிரைவிற்கேட்டையுமருக்கன்சனிசேய்
விரவியவெட்சியுங்கன்னிதுலாமேடநண்டெட்சியுந்
தாமுறுமட்டமசுத்தியுந்தள்ளியபக்கங்களு
மெரிவெழச்சுட்டலறுத்தல்காரம்பெய்தற்கேந்தனவே.

(எ - து.) ஆயிலியம் திருவாதிரை மூலம் கேட்டை இந்நாட்களிலே ஞாயிறு சனி செவ்வாய் வாரோதயங்களில் கன்னி துலாம் மேடம் கர்க்கடகம் இவ்விராசி யுதயத்திலே அட்டமசுத்தி யுண்டாகப்பக்கச்சித்திரையென்ற சொல்லிய திதிகளிலே புண்ணறுத்தல் சுடுதல் காரமிடுதல் அட்டைவிடுதல் முதலிய வரக்கர் வயித்தியஞ்செய்யலாம் †—எ - று. (உ)

நோய்மிருந்துநாள்.

முப்பூரக்கேட்டையடுப்பாரன்முக்கணன்குன் றுபுட்கால்
பைப்பணிநாளினவமிநான்காறுயர்பன்னிரண்டுஞ்
செப்புறுசேய்சனிஞாயிறுயோகத்திற்செந்திருவே
வெப்பினையுற்றவர்தாஞ்சாவரென் றுவிதித்தனரே.

(எ - து.) பூரத்திரயம் கேட்டை பரணி கார்த்திகை திருவாதிரை சதயம் அவிட்டம் சோதி ஆயிலியம் இந்நாட்களும் நவமி சதுர்

---

* சிலர் பூருவபக்கமுஞ் சனிவாரமுமாகா வென்பர்.

† சிலர் இவையொழிந்த பாபநாட்களுமா மென்பர்.

த்தி ஷஷ்டி துவாதசி இத்திதிகளும் செவ்வாய் சனி ஞாயிறு இவ்வார ங்சளுங் கூடினயோசத்து வியாதியுண்டாகி விறப்பார்கள் — எ-று. ()

நோய்மாறிக்குளிக்க.

நாவாய்கழைசோதிமூன் றுத்திரமாகநாகம்பண் டி
மேவாமதிவெள்ளியோரையும்வாரமும்விட்டுநின் ற
கோவாவிருத்தைதசமியிற்கோணுட்கடியவற்றிற்
பாவாய்வினைவிட்டுநீராடற்காமென் றுபன்னினரே.

(எ - து.) இரேவதி புனர்பூசம் சோதி உத்திரத்திரயம் மகம் ஆயி லியம் உரோகிணி இந்நாட்களும் சந்திரன் வெள்ளி இராசிவாரோத யாங்சகங்களு மொழிந்த சதுர்த்தி நவமி சதுர்த்தசி தசமியில் முன் சொன்ன குரூரநாள் வாரோதயாங்சகங்களிலே நோய்மாறிக் குளிப் பது — எ - று. (ச)

திரிபுட்கரயோகம்.

முக்கா லுங்கா லுமுடைத்தாயநாட்களும்பத்திரையு
மிக்காயவெள்ளிவியாழஞ்செவ்வாயும்விளங்குகூட்டங்
தக்கார்திரிபுட்கரயோகமாமென்பர்சாதல்சுட
லக்காரியம்வரின்மூன்ருகுமென்மயிலாயிழையே.

(எ - து.) முக்கால்நாளான புனர்பூசம் விசாகம் பூரட்டாதியும் கால்நாளான கார்த்திகை உத்திரம் உத்திராடமும் பத்திரையான துதியை சத்தமி துவாதசியும் வெள்ளி வியாழம் செவ்வாய் வாரங்க ளுஞ் சேர்ந்தநாள் திரிபுட்கரயோகமாம். இவ்வியோகத்தில் மரித்தல் சுடுதல் செய்தால் அச்குடியில் * மூவர் மரிப்பார்கள் — எ-று. (ரு)

சிராத்தம்.

வேதியர்க்குப்பதி னென்ருநாள்வேந்தருக் கிரெட்டினிற்
றீதில்வணிகர்க் கிருபதில்வேளாண்டி றத்துநல்லோர்க்
காதியாறைந்தினி லன்றிச்சிராத்த மபரபக்கத்
தோதினர்தீக்கோள் சரமுற்றெழுக்கொள்க வொண்ணுதலே.

(எ - து.) பிராமணருக்குப் பதினோராநாள் க்ஷத்திரியருக்குப் பதினாறுநாள் வைசியருக் கிருபதாநாள் § வேளாளருக்கு முப்பதாநாள்

---

* சிலர் இவ்வியோகத்துப் பலாபலம் வந்தாலு மூன் றுவரையாக வர்த்திக்கு மென்பர்.

§ வேளாளர் உழுவித்துண்போரும், உழுதுண்போருமென விரு வகையினர். இவற்றின் விரிவை தொல்காப்பிய அகத்திணையியல் ௩௦-ம் சூத்திரம் நச்சினார்க்கினிய ருரையிற் காண்க.

யாவனொருவன் மரித்தநாட் டொடங்கித் தத்தம் வருணக் கிரமப்படி
யே ஆசௌசம் நீங்குநாளாம். இத்தினத்திலே சிராத்தஞ் செய்யப்
படும். சிராத்தகாலங்களுக்குத் தினமுதலிய தோஷமில்லை. பிரதான
மான காலமொழியக் கொள்ளில் உத்தமகாலத்திலே யபரபக்கங்களி
லே பாபக் கிரகோதயமாகச் சரராசியிலே சிராத்தம் பண்ணுவது—
எ - று. (௬)

இதுவுமது.

வளரும்பிறைபதி னுன்குடனந்தை யமைந்ததிதி
யளவுறுவெள்ளிதன் வாரோதயம்பார்வை யோரையங்சம் -
விளைவுறுசென்மம் விதாதாமுரசெவி மேவுநாவாய்
தளருமுக்காலுறு நாளுஞ்சிராத்தந் தவிர்ந்தனரே.

(எ - து.) பூருவபட்சம் சதுர்த்தசி பிரதமை சஷ்டி ஏகாதசி
திரயோதசி வெள்ளிவாரோதய இராசியங்சம் சென்மத்திரயம் உரோ
கிணி உத்திரட்டாதி பூரம் இரேவதி புனர்பூசம் விசாகம் பூரட்டாதி
கார்த்திகை உத்திரம் உத்திராடம் இவை சிராத்தத்துக்கு ஆகா—
எ - று. (எ)

இதுவுமது.

பொருந்தாதநாட்களும் வைகாசிகமும் புதல்வர்பெண்டிர்
தருந்தாவில்சென்ம மொழிந்தனவுஞ்சந்திராட்டமெட்டுந்
திருந்தாத்துவாதச வோரையும்வில்லுஞ் செழுஞ்சரமும்
வருந்தாதநன்மை வருஞ்சிராத்தஞ்செய்யில் வாணுதலே.

(எ - து.) அனுகூலமில்லாத நாளும் வைகாசிகமும் யசமான்
புத்திரன் பாரி இவர்களுடைய சென்மத்திரயமும் ஒழிந்தநாளும் சந்
திராட்டமமும் உதயலக்கினத்துக்கு அ, கஉ இவ்விராசிகளும் தனு
வும் சரராசியும் சிராத்தத்துக்குச் சிரேட்டமாம்—எ - று. (அ)

இதுவுமது.

நிலையானசென்மமமைந் தேழ்சேர்த்தவோரை குருமகம்புள்
வலமாவடுப்பு மகயிரஞ்சோதிசெக் கோணம்பனை
செலநாட்களிறெரி சித்திரைமூலஞ் திநிரவமி
தலையாமுவாவிரா தட்டமின்று சிராத்தத்திற்கே.

(எ-து.) சென்மலக்கினமும் ௫, எ இவை ஒழிந்த ராசியும் பூசம்
மகம் அவிட்டம் அசுவதி பரணி மிருகசிரீஷம் சோதி சதயம் திரு
வோணம் அனுஷம் பூராடம் அத்தம் கேட்டை சித்திரை மூலம் இ

நாளிலே நவமி அமாவாசை துவாதசி அட்டமி இத்திதிகளிலே சிரா த்தம் பண்ணுவது—எ-று. (கூ)

இதுவுமது.

புகர்புதன்பொன்னவன்வாரோதயங்கால்கள்போற்றுமேலா
முகமுறுமோரைநாட்டிதென்பர்மூன்றுறுபன்னிரண்டின்
மிகநல்லகோணிற்பத்திக்கோண் மிருகண்டகோணத்தினிற்
றகவுறநிற்பச்சிராத்தஞ்செயநன்றுதார்குழலே.

(எ - று.) வெள்ளி புதன் வியாழன் இச்சுபக்கோளினுடைய வாரோதயாங்சகங்களும் ஊர்த்துவமுகராசி நாட்களுமாகாது. சுபக் கோட்கள் ங, சு, கஉ, இவ்விடங்களினும் பாபக்கோட்கள் கேந்திரத் தினுந் திரிகோணத்தினு நிற்பச் சிராத்தம் பண்ணுவது—எ - று. ()

பாஷாணத்தாபனம்.

பேசும்பலிகருமஞ்செயவெண்ணிற்பிறைநுதலாய்
மாசிபுரட்டாதியாடிதைபங்குனிமாதநன்றாந்
தேசுறுமல்லாதிங்களிற்றேய்பிறையாஞ்சிறந்த
பேசிலொற்றித்தினம்வைத்தெடுப்பார்கற்பெய்வளையே.

(எ - று.) சற்காலமொழிந்து உத்தரகிரியை பண்ணுகில் மாசி புரட்டாசி ஆடி தை பங்குனி இம்மாதங்களிலே யாதல் இவையல் லாத மாதங்களி லபரபக்கத்தாதல் ஒற்றித்தினத்திலே முடிவாகக் கல்லுவைத் தெடுப்பது. (கக)

இதுவுமது.

கல்லுவைத்தற்கிருமாண்போரையைக்கரைந்தாரெடுக்கச்
செல்லுறுகாலஞ்சரத்தினிற்செப்பினர்சேணிற்பிறை
புல்லுமிணைகாணிற்றீதென்புகலுஞ்சிராத்தத்திற்குச்
சொல்லும்பதினோரிடஞ்சுத்திகொள்பசுரிகுழலே.

(எ - று.) கல்லுவைக்குமிடத்து உபயராசியும் எடுக்குமிடத்துச் சரராசியுமாம். திரராசி தவிரப்படும். அதிக மாதமென்று சொல்லப் படும் உ-பிறைகாணுத காலத்திலே கல்லுவைத் தெடுப்பது. இலக் கினத்துக்கு கக-ம் இடஞ் சுத்தியாகப் பிரேதகாரியமெல்லாம் பண்ணு வது. (கஉ)

நாராயணபலி.

அட்டகைக்குச்சொல்லுமாதங்களினுமல்லாவிடத்தும்
பட்டதுவாதசியோணமிரண்டுவாப்பல்வளையாய்

தட்டறவைத்தனர்வெள்ளிபொன்வாரஞ்சதுர்த்தசியும்
விட்டுரைசெய்தனர்நாராயணபலிவேதியரே.

(எ - து.) மேலட்டலைக்குச் சொல்கின்ற மாசி புரட்டாசி மாத ங்களிலும் அல்லாத மாதங்களிலும் துவாதசி திருவோணம் அமவாசை பூரணை இவற்றில் நாராயணபலியிடுவது. வெள்ளி வியாழன்* சதுர்த்தசி ஒழிந்த திதிவாரங்களிலே துன்மரண மானபேருக்கு நாராயணபலி யிடுவது—எ - று. (கங.)

கிருகசாந்தி.

அட்டமராசிக்கடைத்தவர்நாளில்வைநாசிகத்தி
லிட்டமதாகியசென்மங்களிலினன்வாரத்தினிற்
கிட்டியமுன்றைந்தேழ்நாளிற்கிளர்முன்பொழுதிற்றனஞ்
சிட்டமறையவர்க்கீந்துகோட்பூசனைசெய்கென்பரே.

(எ-து.) கிருகசாந்தி பண்ணுமிடத்துச் சந்திராட்டமம் வைநாசிகம் சென்மத்திரயம் ஞாயிற்றுக்கிழமை ௩, ௫, ௭, இந்நாளிற் பூருவாணத்திலே சிரேட்டமான பிராமணருக்கு மகா தானம்பண்ணிக் கிருகசாந்தி செய்வது—எ - று. (கசு)

இதுவுமது.

சாந்திக்குநன்றுமகமுத்திரங்கள்சதயஞ்சோதி
யார்ந்திருபூசமரியுருளத்தங்கலமனுடஞ்
சேர்ந்தவுவாவுடன்சித்திரையாம்பக்கந்திதுசுன்சேய்
மார்தனிர்மேனிகல்லாய்வாரநித்தனைநன்றென்பரே.

(எ - து.) மகம் உத்திரத்திரயம் சதயம் சோதி புனர்பூசம் பூசம் திருவோணம் உரோகிணி அத்தம் இரேவதி அனுஷம் இந்நாளிலே உவாக்கள் பக்கச் சித்திரை சனி செவ்வா யொழிந்த திதிவாரங்களிலே கிருகசாந்தி பண்ணுவது—எ-று. (க௫)

---

* விஷம் ஆயுதம் செந்நாய் புலி முதலிய மிருகங்கள், மரமேறி விழுதல், இடி, நெருப்பு, முதலியவைகளாலும், பிராமணாதி வர்ணங்களிற் கொடியராகிய சிலராலும் துன்மரண மடைந்தவர்கள் விஷயத்தில், சதுர்த்தசியிற் சிராத்தஞ் செய்தல் மிகு விசேஷமென்று பராசர ஸ்மிருதியிற் சொல்லப் பட்டிருக்கின்றது.

§ அட்டகை.

கன்னிகுடத்திற்கதிருறத்தேய்பிறையட்டமியிற்
பன்னுநவமியேழ்பன்னேஞ்சினல்விதிபாதத்தினின்
மன்னுங்கிராணம்விடுவாயயனங்கள்சங்கிரம
முன்னுரைநாட்களுமட்டகைபண்ணமொழிந்தனரே.

(எ - து.) மாசி புரட்டாசி மாதத்திலே அபரபக்கத் தட்டமி நவமி சத்தமி அமாவாசை வியதிபாதம் கிராணகாலம் விஷுவாயனம் சங்கிரமம் இவற்றினும் முன்பு சிராத்தத்திற்குச் சொன்னநாளினும் அட்டகை பண்ணுவது—எ - று. (கசூ)

தீவினைப்படல முற்றிற்று.

ஆகக்கவித்துறை சகூரு.

---

## உற்பாதப்படலம்.

வில்லிரவாகுதன்மேதினிகம்பித்தல்விண்ணதிர்த
லல்லிடைமீன்விழலம்மீன்பகலுறலாசைபெங்குஞ்
சொல்லிற்புகைந்திடல்சூரியனேக்கிரண்டாயுதித்தல்
கொல்லியலாய்நண்பகற்கூகைபாடல்கொடிதென்பரே.

(எ - து.) இரவில் வில்லுண்டாதல் பூமிநடுங்கல் வானமதிர்தல் இரவின் நட்சத்திர முதிர்தல் நட்சத்திரம் பகலிற்றோன்றல் திக்கெங்கும் புகைதல் ஆதித்திய னிரண்டாய்த் தோன்றல் உச்சிக்காலத்திற் கூகையுழுமுதல் இவை நீது—எ - று. (க)

சூரியனைப்பரிவேடமிடல்சூறையாடல்சுவா
வோரியரற்றல்புட்டன்னிறம்வேறுபடலுலகிற்
பாரியவான்மரம்வற்றலுண்டேலப்படிபுரக்கும்
பேரியன்மன்னவர்க்குப்பெருந்தீங்குண்டுபெய்வளையே.

---

§ மார்க்கசீர்ஷம் (மார்கழி) முதலிய நான்கு மாதங்களுடைய கிருஷ்ண சத்த அட்டமிகள் அஷ்டகை எனப்படுமென்று ஸ்மிருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(எ - து.) ஆதித்தியனை வளைத்துப் பரிவேடித்தல் சூறுவளி யுண்டாதல் நாய் நரி யழுதல் பட்சிசணிறம்பேதித்தல் பெரிய வால மரம் பால்வற்றல் இவையுண்டாயி னரசருக்குத் தீது - எ-று. (உ)

தேவர்சிரித்தல்சலித்தல்திரும்புதல்வேர்ப்பிளைத்தல்
நாவிலுங்ரத்தனடுங்குதல்செய்திடினுனிலத்திற்
காவலர்தங்கட்கிடர்பெரிதாங்கருவானுதிரந்
தூவிடினுடுக்தொடுகழன்மன்னுக்துளங்குறுமே.

(எ - து.) தேவர்கள் சிரித்தல் சலித்தல் திரும்புதல் வேர்த்தல் இளைத்தல் இவைசெய்பி னரசருக்கு மிசவுந்தீது. முகில் இரத்தமழை வருடிக்கின் அந்நாட்டுக்கு மரசனுக்குந் தீது—எ - று. (ங)

சிகரத்தகோயில்புகைந்திடிற்றீயெழிற்பேர்படைத்துக்
ககனத்துறுமரங்காற்றின்றிவிழ்ந்திடிற்காவலர்க்குஞ்
சகமத்தனைக்குந்தடுப்பருங்கேடாந்தையாலயத்துப்
புகன்முட்டை*யிடலுண்டேற்புவிபாழ்க்கும்புணர்முலையே.

(எ - து.) உயர்ந்தகோயில் புகைந்தாலும் அக்கினி பற்றினுலும் மேலாய் வளர்ந்தமரங் காற்றின்றி விழுந்தாலும் அரசனுக்கு முலகுக் கும் கேடாம். ஆந்தைகோயிலிற் புகினும் முட்டையிடினு முலகங் கெடும்—எ - று. (ச)

காக்கையிரவிலழைத்தல்வெழுத்திடக்காண்டலிரா
னோக்குங்குயிலுரைவான்மீனெழஹூ றியேயமரிற்
றுக்கிடுஞ்சேய்பொன்னைவென்றிடிற்றண்மதிமாசிமகத்
தாக்குநடுவேகிலங்நாடுபாழ்த்துணவஃகிடுமே.

(எ - து.) இரவிற் காகமழைத்தல், காகம் வெழுத்தல், இரவிற் குயில் கூவல், வால்வெள்ளி யுதித்தல், போரில் பிரகஸ்பதியைச் செவ் வாய் வெல்லல், சந்திரன் மாசிமகத்துக்கு நடுவே புகல், இவை யுண் டாயின் அந்நாடு கெட்டு உண்டி சுருங்கும்—எ - று. (ரு)

ஆமம்பெருகல்பகல்மீன்விழலொருக்கவானிடத்தே
பாமன்னுபாட்டெழல்பான்மதியோர்கதியிற்சரித்த
லாமன்னிமாவேறலாசையெரிதலராவழைத்த
லாமன்குரல்பல்லிடத்துமுண்டேலஃகிடுமுலகே.

---

* இடல் என்றது நடலெண விகாரமாயிற்று.

(எ - து.) புகை மிகுத்தல், பகல் வெள்ளி விழுதல், ஆகாயத்திற் பாட்டோசை யெழுதல், சந்திரனேர்கதியிற் செல்லுதல், பசுக்குதிரையைப் புணர்தல், திக்குக்களெரிதல், சர்ப்பமழைத்தல், பலவிடத்துங் கூகைக்குரலுண்டாதல் இவையுண்டாயி னவ்வூர் வளஞ் சுருங்கும்—எ - று. (சு)

ஊர்ந்துதிரிவபறத்தல்பறப்பவையூர்ந்திடினுஞ்
சேர்ந்தெழின்மாதர்பெண்ணணிரண்டீனினுந்தேசமெல்லாங்
கூர்ந்திடுதுன்பங்குறையுடலங்கமிகுதலன்றி
யார்ந்துருவின்றிப்பிறப்பினுமக்குடியாசுறுமே.

(எ - து.) ஊர்வன பறக்கினும், பறப்பன வூர்கினும், திரிகளிரண்டுபெண், ணிரண்டாண்பெறினும், அத்தேச மெங்குந் துன்பமுண்டாம். அங்கங்குறைதல் மிகுதல் உருவின்றிப் பிறத்தல், இவை யுண்டாயினக் குடிகெடும்—எ - று. (எ)

பல்குட்டியீன்பவையாடொழிந்தொன்றனையீன்றிடினு
மல்லற்படுத்துந்தன்சாதிபிற்பேடுடனன்றிவேறோர்
சொல்லுற்றபேட்டினுடனேமுயங்கத்தொடர்ந்திடினும்
புல்லப்புதுப்புள்வரினும்பழம்புள்ளுப்போகினுமே.

(எ - து.) பல்குட்டியீனு மிருகங்களி லாடொழிந்த மற்றவையொருகுட்டி யீன்றாலும், பட்சிகள் தன் பெடையோடன்றி வேறோர் பெடையோடு சேரப்புகினும், புணர வொருபட்சி புதுக்கவரினும், முன் புணர்ந்த பட்சி போகினும் அந்நாட்டுக்குத் தீதுண்டாம்—எறு.

மன்னவர்வாழ்பதிமாநகரங்களின்மாமறையோர்
பன்னும்பதியினிலூமனைழைத்திடிற்பாழ்படுமா
மின்னுருமேறுடுவெற்றிடிவான்பலமீன்விழினேய்
துன்னும்புவியிற்கும்வேந்தர்க்குமென்று துணிந்தனரே.

(எ - து.) அரசர் பிராமணருடைய வில்லங்களிலே கூகைகூப்பிடி னவ்வூர்கெடும். மின்னல் முழக்கத்துடன் வெள்ளிடி யிடித்தல் ஆகாயத்தினின்று நட்சத்திரம் வீழ்தல் இவை யுண்டாயின் பூமண்டலத்திற்கும் அரசருக்குங் கேடுண்டாம்—எ - று. (கூ)

ஆந்தையிறப்பிலிருப்பிலவ்வில்லத்தவர்க்குறுநோய்
கூர்ந்துநரிபுகிற்போவர்குடிதேனீக்கூடுவைக்கிற்
பாந்தளுறைபிற்பருந்தாமைபிற்புகிற்பான்மொழியாய்
வேந்தர்பயமிறப்பிற்சுவர்வேறிடில்வெந்துயரே.

(எ - து.) ஆந்தைப்பட்சி யிறந்தாலும் இருந்தாலு மவ்வீட்டை யுடையவர்களுக்கு நோயுண்டாம். வீட்டில் நரி புகுந்தாலுங் குடி போவர்கள். வீட்டிற் றேனீ கூடுகட்டுதல் பாம்புறைதல் பருந்து ஆமை புகுதல் இவை யுண்டாயி னரசராற் பயமுண்டாம். இவை மரித்தாலுஞ் சுவர் வெடித்தாலுந் துன்பமுண்டாம்—எ - று. (க0)

இல்லத்துப்பூனைவிழைவின்றிநாடொறுமெப்பொழுதுஞ்
சொல்லுற்றழிற்றுன்பமில்லத்தினிற்கூரைசூழவரி
னல்லற்படுத்துமவ்வூர்க்குட்டியாமவைமுட்டையிடல்
வல்லுற்றமுட்டைகடான்குட்டியாயினுமண்கெடுமே.

(எ - து.) வீட்டிற் பூனை யாதொரு காரியமின்றி நாடோறு மெந்நேரமுமழின் அவ்வீட்டுடையவர்கட்குத் துன்பமுண்டாம். அப்பூனை வீட்டிற் கூரையைச்சுற்றி வரினுந்துன்ப முண்டாம். அவ்வூரிற் குட்டியிடுமவை முட்டையிடினும் முட்டை யிடுமவை குட்டியிடினும் பூமண்டலங்கெடும்— எ - று. (கச)

ஒருதிக்கிலேபற்றியெப்போதுந்தூமமிடிலங்நாடுங்
கருதப்படும்பதியுங்கெடுங்கங்குலெழுமதியைப்
பொருதுற்றவட்டத்துட்கோளுறினும்பொலியச்சிவந்து
பெருவட்டமாயிடினும்பெரும்பான்மைமழைபெய்யுமே.

(எ - து.) ஒரு திசையிற் பற்றி யெந்நேரமும் புகை யுண்டாகிலந்நாடும் நகருங்கெடும். இரவிலே சந்திரனை வளைக்கும் பரிவேடத்துக்குட் கிரகங்கணிற்கினும் அப்பரிவேட மிகச்சிவந்து பெரிய வட்டமாயிடினும் பெருமழையாம்—எ - று. (கஉ)

வட்டமிரண்டிடின்மன்னவனாட்டைமுனியுமென்க
வட்டமொருமூன்றுநான்காகின்மன்னவர்க்கேதுயராம்
வட்டமதுள்ளேகுசனுறிற்போரென்மழைபிலையாம்
வட்டமதுட்சனியேற்கலகம்மென்மதியிடத்தே.

(எ - து.) சந்திரனை வளைந்து இரண்டுபரிவேடமிடின் அரசன் நாட்டைக் கோவிப்பன். ந, ச, பரிவேடமிடி லரசர்க்குத் துன்பமாம். பரிவேடத்துட் செவ்வாயுறிற் போராம். மழையில்லை, அப்பரிவேடத்துட் சனியுறிற் கலகமாம்.எ - று. (கங)

சனிதானுறவட்டஞ்சந்திரன்சாரிற்பிணிபுகரேற்
பனியேமழையில்லைப்பார்ப்பானுறுகிற்பெருமழையா
மினிதேபுதனுறினின்னுண்முதலேழுநாளிடத்து
னிசேர்மழையில்லையேநாசமாமென்பர்நல்அபிரே.

(எ - து.) சனியை வளைத்துப் போமம்பரிவேடத்துக்குட் சந்திரன் கூடுகினேயாம். அப்பரிவேடத்துக்குட் சுக்கிரன்கூடின் மழையில்லையாம். வியாழன் கூடுகிற் பெருமழையாம். புதன் கூடுகினன்ரும். பரிவேடிக்கு நாண் முதலேழு நாளைக்குண் மழையில்லையாயின் பிரசைகள் நாசமாம்—எ - று. (கச)

உதயத்துமத்தமத்தும்பரிவேடமிடினும்போராஞ்
சிதைவிக்குமுன்பகல்வானினைச்செய்யநட்டுச்சியினி
லதிவிட்டிபின்பகலாக்கமுயிரினுக்காங்கரவு
பூதியுற்றவெங்கதிரைப்பரிவேடிக்கினன்றென்பரே.

(எ - து.) சூரியனை யுதயகாலத்தும் அத்தமனகாலத்தும் பரிவேடிக்கிற் போராம். முன்னேரமாகி லழிவாம். மத்தியானமாகி லதிகமழையாம். பின்னேரமாகிற் பிரசைகளுக்கு லாபமாம். கிரகண காலத்தி லாதித்தியனைப் பரிவேடிக்கினன்மையாம்—எ - று. (கரு)

வடக்குமழைதெற்குவாயுமிகுமன்னர்கேடுமேல்கீ
ழிடிற்பிணிகாரிலையாங்கிருபக்கத்துமந்திபடு
மிடத்தின்மலரெழும்போதின்மழைபுச்சியினரசர்
படப்போர்மலைவர்பதிசூரியன்செயல்பார்குறித்தே.

(எ - து) சூரியனுக்கு வடக்குப்பரிவேடிக்கின் மழையாம். தெற்காகின் காற்றுமிகுதியாம். மேற்காகி லரசர்க்குக் கேடாம். கிழக்காகினேயாம். இருபக்கத்துமாயின் மழையில்லை. அத்தமனகாலத்தும் விடியற்காலத்துமாயின் மழையாம். உச்சிக்காலமாயி னிராச கலசமாம்—எ - று. (கசா)

சிலைமறிமீனரிதேளெழமீன்விழிற்செய்யமன்ன
ருலைவினைச்சொல்லூர்துலாங்குடநண்டுசுளுவினஃகம்
விலைகுன்றும்வீணையின்மந்திரிசாம்வெய்யநோய்கன்னியி
னிலைபெறுமேற்றின்மழையின்றியேபயிர்நீங்கிடுமே.

(எ - து.) தனு மேடம் மீனம் சிங்கம் விரிச்சிகம் இவை யுதிக்க நட்சத்திர மெரிந்துவீழி லரசருக்குக் கேடாம். துலாம் கும்பம் கர்க்கடகம் இவை யாகி லகமொறுக்கும். மிதுனமாகில் மந்திரி மரணமாம். கன்னியாகில் வியாதியாம். இடபமாயின் மழையின்றிப் பயிரழிவாம்—எ - று. (களஎ)

குடக்குங்குணக்குங்குறித்துவிற்ரேன்றிடிற் கொண்டலகு
சடக்கெனசூழ்த்தலென்றேயறிசாற்றியதெற்கிடினும் [வால்
வடக்கினுமன்னவர்தந்திரமந்திரத்துள்ளவர்க்குந்
திடுக்கம்வருமென்றுரைசெய்சிலைநுதற்றேமொழியே.

(எ - து.) மேற்குங் கிழக்கும் விற்றோன்றுகிற் சடுதியின் மழை யென்றுந் தாமதமென்று மறிக. தெற்கு வடக்கில் விற்றோன்றில் அரசன் சேனைக்கும் மந்திரிக்குந் தீதுண்டாம்—எ - று. மழை மேற் காகிற் றாமதமென்றும் கிழக்காகிற் சடுதியிலென்று மாறிப்பொருள் கொள்க. (௧௮)

கூவல்குளங்களினீர்பரந்தேறினுங்குன்றிடினு
மேவியநீர்சுளித்துள்வாங்கினுநிறம்வேறுறினும்
வீவுறமப்புனலுண்பவர்தாழ்மதிமேற்கொளினுங்
காவலனுடுங்கடுந்துயர்பட்டுக்கழிந்திடுமே.

(எ-து.) கிணறு குளங்களி னீர்பரம்பிமிகினுங் குறையினும் அந் நீர்சுளித்துள்வாங்கி நிறம் வேறுகினும் அந்நீருண்பவரது குறைந்த புத்தி யதிகப்படினும் அரசனு மந்நாடு மிகுந் துயரப்பட்டுக் கலக்க மடையுமாம்—எ - று. (௧௯)

புத்தேளிர்மேனியிற்பீடத்தினிற்செஞ்சிதல்பொருந்தி
லத்தேசமும்பதியுங்கெடுமாலயத்துள்வாயிலின்
வைத்தேறுமண்டபத்தங்கணத்தும்வரினூர்கெடுமா
மொத்தேபலிபீடத்துற்றெழினூர்பாழ்க்குமொண்ணுதலே.

(எ - து.) தேவவிக்கிரகங்களினும் பீடத்தினும் சிதல் பொருந் தின் அந்நாடு மரசனுங்கெடும். கோயி லுட்வோரத்தினும் துவசத்த ம்பமண்டபத்தினும் முற்றத்தினும் பலிபீடத்தினு மஃதுண்டாயி னவ்வூர்கெடும்—எ - று.

வீட்டில்சுவாக்கோழிமேலெலிகிழெலிமிக்கிடினுங்
கெட்டிடுமில்லங்கிளர்ந்துசிசுரிபறந்திடினுங்
கோட்டிடுமூட்டைமிகினுங்குடிபோக்குந்திண்ணமென்று
தட்டறவோதினர்சான்றோர்வடசொற்றளிரடியே.

(எ - து.) வீட்டிற்பூச்சி நாய் கோழி இறப்பெலி அகழெலி இவைகண் மிகுந்தாலும் வீட்டிலுள்ள வெலி யவ்வீட்டைவிட்டுப் போகினும் மூட்டை மிகுந்தாலும் அக்குடி போமென்று வடமொழிப் புலவர்கள் கூறினர்—எ - று.

உற்பாதப்படலம் முற்றிற்று.

ஆகக்கவித்துறை ௨௮௪.

---

# எச்சவினைப்படலம்.

## சங்கிரமபலன்.

தன்னுளிற்பத்திலிருபதிற்சங்கிரமிக்கிற்கொலை
யிந்நாளின்மற்றிருபாலுந்தனச்சேதமின்பமெய்து
மந்நாடமக்காறின்மூன்றுறிற்பன்னொன்றிலேயிரண்டிற்
சொன்னூர்கதிரவனேற்சூலனன்றென்பர்தூய்மொழியே.

(எ - து.) யாவனொருவன் பிறந்த நாளிலும் க0-ம், நாளினும் உ0-ம், நாளினும் ஆதித்தியன் சங்கிரமிக்கிற் பிராணபயமுண்டாம், இவற்றினருகி னட்களிற் சங்கிரமிக்கின் அர்த்த சேதமாம். அவற்றின் ஆறுநாள் நன்மையைப்பண்ணும். ஆதித்தியன் ௩, ௬, கக, க0 இவ்விடங்களிற் சங்கிரமிக்கிற் சூலதோஷமில்லை—எ - று. (க)

## இதுவுமது.

சன்மங்களிற்சங்கிரமிக்கினுசமயவிரண்டு
மின்னலொழிந்தவந்நாளிருமூன்றுமிசைந்தடைவே
பொன்னிழவுபேறுபோக்குநிலைபேறுபொற்கொடியே
மன்முனிவாமன்னருளென்றுரைக்கும்வடமொழியே.

(எ - து.) சென்மத் திரயங்களிற் சங்கிரமிக்கிலது தோஷமாம். இவற்றின் முன்னும்பின்னு மடைந்தநாள் நன்மையைப் பகைக்கும். ஒழிந்த ஆறுநாட்களுங் கூடியடைவே தனச்சேதம் தனலாபம் யாத்திரை கிருகவாசம் இராசபயம் இராசபலம் இவையுண்டாம்—எ - று. (உ.)

## இதுவுமது.

பத்தின்வருக்கமுமெட்டின்வருக்கமும்பத்திரெட்டுச்
சுத்தமகரங்குளிர்துலைமேடத்துச்சூலநாளாய்
வைத்தனரல்லாதமாதசூலங்கட்குநாண்மூன்றென
வுத்தரகார்க்கியனூர்தன்மந்திரியோதினரே.

(எ-து.) சங்கிரம சூலநாள் உத்தராயன மகரத்துக்கு க00-நாள் தெட்சணாயன கர்க்கடகத்துக்கு ௬௪-நாள்; ஐப்பசி விஷுவத்துக்கு க0-நாள்; சித்திரை விஷுவத்துக்கு க௬-நாள், அல்லாத இரவிசங்கிரமங்களுக்கு மும்மூன்று நாள் தோஷமாம்—எ - று. (௩.)

இதுவுமது.

உதிக்கும்பொழுதினிற் றேசங்கெடுமுச்சியிற்பயிர்கள்
கொதித்தல்லவாமிளவுச்சியிநோய்கொற்றமன்னர்கெடும்
பதிப்பறுபிற்பகற்பாழ்பகலோன்படமுன்புகேடா
மதிப்படுநன்மையிராவிஷுவாயனமாயிடிலே.

(எ - று.) விஷுவாயன முதயகாலமாகிற் றேசத்திற்குக் கேடுண்டாம். உச்சிப்பொழுதாகிற் பயிர்க்கேடாம். இளவுச்சியாகில் வியாதியு மிராசபீடையுமாம். பிற்பகலாகினுசமாம். சந்தியாகாலமாகிற் றேசத்திற்காகாது. இரவாகின் மிகவுநன்றும்—எ - று. விஷுவமென்று மேடச்சங்கிரமத்துக்கும் துலாச்சங்கிரமத்துக்கும் பெயர். விஷுவாயனமென்று மேடச்சங்கிரமத்துக்குப் பெயர். (ச)

ஆடிபஞ்சமி சித்திரைச் சங்கிரகபலன்.

பாவலராடியிற்பஞ்சமிசித்திரைச்சங்கிரம
மேவியவாரம்பலமுரைசெய்யில்வெய்யோன்முதலாய்
தாவல்பெருமழைபோர்பெருங்காற்றுநற்காலங்கொக்க
மேவியவெள்ளம்வினுசமதாமென்பர்வேல்விழியே.

(எ - று.) ஆடிமாதத்துப் பூருபக்கப்பஞ்சமியும், சித்திரை விஷுவமு முற்றவாரத்தின் பலன் அற்பவிருட்டி அதிவிருட்டி யுத்தம் மகாவாதம் சுபிட்சம் பிரளயகாலம் நாசம் என்ற ஏழுபலனும் ஞாயிற்றுக்கிழமை முதலாக வடைவே யறியப்படும்—எ - று. (ரு)

மகாசங்கிரமபலன்.

மூன்றுத்திரங்கமழ்மூலமுருந்தனிற்றையயனந்
தோன்றிடிலஃகஞ்சுரிகுழலாயேறுந்தொல்பரணி
யான்றமுப்பூரமராக்கேட்டையாகிலகந்தாழமற்
றேன்றவைபிற்சமமாகவெல்லோருமியம்பினரே.

(எ - று.) உத்திரத்திரயம் புனர்பூசம் மூலம் திருவோணம் இந்நாளின் மகரசங்கிரமமாகி லஃகமேறும். பரணி பூரத்திரயம் ஆயிலியம் கேட்டை இந்நாளயின் அஃகங்குறையும். ஒழிந்தநாட்கள் சமமாம்—எ - று. (சு)

மேடச்சங்கிரமபலன்.

பரணிமுதனான்கும்புன்பயிராஞ்செங்கையாதிநான்கும்
வரைவின்மழையாமகமுதலாம்பத்தில்வானம்போக்கு
முரணியர்முதலொன்பதுநற்காலமென்பரென்று
மிரவியம்மேடத்திசைவுறுநாட்களினவளையே.

(எ - து.) பரணி முதலாக நாலுநாளிற் புன்பயிராம். திருவாதி
ரைமுதலாக நாலுநாளு மிகுமழையாம். மகமுதற் பத்து நாளின்
மழையற்பமாதல் அல்லது சுழித்துப் பெய்தலாம். பூராடமுதலொன்
பதுநாளும் சுபிட்சகாலமாம். இது சித்திரை விஷுவம்பிறந்த ஆண்டு
—எ - று. (எ

இதுவுமது.

மீனரிவிற்கொறிகன்னிவிடையெழச்சங்கிரமிக்கில்
வானமிகும்ஃகமேறுமகரந்துலேகுடமே
லானசமமாமலவன்றடிதேளிலாயிழையா
யினம்படுமஃகமென்விஷுவாயனமெப்பொழுதே.

(எ - து.) மீனம் சிங்கம் தனு மேடம் கன்னி இடபம் இவையு
தயமாக விஷுவாயனம்வரில் அவ்வாண்டு மழையதிகமாய் அஃகமே
றிக் காலமுநன்றும். மகரம் துலாம் கும்பம் உதயமாகில் சமமாம்
கற்கடகம் மிதுனம் விரிச்சிகம் உதயமாகில் மழையு மஃகமுஞ் சுருங்
கிச் காலமுநன்றாகாது—எ - று. எப்பொழுது மென்றதனுல் மற
றுள்ள சங்கிரமங்களுக்கு மிப்படியே பார்க்கப்படும். (அ)

கிரகணபலன்.

வாருணமண்டலமீர்பாம்பரன்விற்செக்காடிநாவா
யாரன்முறந்தைபதமகம்பூரமடுப்பனலாந்
தேர்பனேபுட்கேட்டையோணமுரசுசெழுநிலனு
மார்வுறுமல்லாதவைவாயுமண்டலமாமென்பரே.

(எ - து.) பூராடம் ஆயிலியம் திருவாதிரை மூலம் சதயம் உத்
திராடம் இரேவதி இவை வருணமண்டலமான நாட்களாம். காத்தி
கை விசாகம் பூசம் பூரட்டாதி மகம் பூரம் பரணி இவை அக்கினி
மண்டலமான நாட்களாம். உரோகிணி அனுஷம் அவிட்டம் கேட்
டைதிருவோணம் உத்திரட்டாதி இவைபூமண்டலமான நாட்களாம்,
ஒழிந்த அசுபதி மிருகசீரிடம் புநர்பூசம் அத்தம் சித்திரை சோதி உத்
திரம் அவை வாயுமண்டல நாட்களாம்—எ - று. (கூ)

இதுவுமது.

உத்தமம்வாருணமண்டலநாளிற்கிராணமுறின்
மத்திமமாநிலமண்டலத்தெய்திடில்வான்பிணியி
னித்தமுநாசமுறும்வாயுமண்டலத்தேறினில
மொத்தகன்ணுப்பசிபோர்கனன்மண்டலமுற்றிடிலே.

(எ - து.) வருணமண்டலமான நாளிற் றோணமுறினன்றும். பூமண்டலமான நாளிற் றோணமுறின் மத்திமமாம். வாயுமண்டல மான நாளிற் றோணமுறில் வியாதி பீடையாம். அக்கினிமண்டல மான நாளிற் றோணமுற்றால் யுத்தமுந் துர்ப்பிட்சமுமாம்—எ - று.

சந்திர தெரிசனம்.

மீனுடைவெண்மதிதெற்குயரும்விடைகுடத்திற்
றுனுஞ்சமமல்லவைவடக்குன்னலமாகினன்றும்
வானுர்பரிமுதன்மூன்றில்வளரும்பிரதமைவரிற்
றேறுயவஃகமுயருமொக்குஞ்சாயுமென்பர்களே.

(எ - து.) சாந்திரமானவகையாற் பங்குனி சித்திரை மாதங்களி லே பிறை தெற்குயரும். மாசி வைகாசியி லொத்துநிற்கும். அல்லாத மாதங்களில் வடக்குயரும். இப்படியொழிந்து விபரீதமாய்வரிற் றேச த்துக்குப் பொல்லாது. அசுபதிமுதன் மூன்றுநாளிற் பூருவபக்கப் பிரதமைவரிலடைவே அஃகமேற்றமும் சமமும் குறைவுமாம்—எ-று.

காலபலன்.

அமைச்சனுடன்சனிசெயுறிலாங்கவற்கேழிடமாஞ்
சமத்தினினிற்றல்செய்தாற்றக்கதென்னிலங்காபுரிக்கு
மிமத்திறுக்குமிடையாநிலமெங்கணும்போரினோயிற்
றுமைப்புறமஃகஞ்சிறுவிலையாலுங்குறைபடுமே.

(எ - து.) வியாழனுடன் சனி செவ்வா யிருவருங்கூடி நின்று றும் அல்ல தொருவர்கூடி நின்றாலும் வியாழனுக்கேழா மிடத்திலே யவர்களிருவர் நின்றாலும் அல்லதொருவர் நின்றாலும் சகல போகங் களையுடைய விலங்காபுரிக்கும் பொன்மயமாகிய விமயபருப்பதத்துக் கும் நடுவிலுண்டாகிய ௬000-ம் யோசனைக்குட்பட்ட கருமபூமியின் மனுஷரெல்லாரும் போர் நோய் பசி முதலியவற்றாற் பீடைப்படுவார் கள்—எ - று. (௬௨)

இதுவுமது.

கிலைமீன்கலைவிடசிங்கத்தந்தத்துச்செவ்வேந்தனுட
னிலைசெய்சனிநிற்பிற்சோறின்றிநேடுயிர்விடுதலான்
மலைசேர்கரங்களினுட்டினிஊரின்மனையின்மன்றிற்
றலையோடெங்கொண்டோடித்திடுங்கூளிதருக்குமிக்கே.

(எ - து.) தனு மீனம் மகரம் இடபம் சிங்கம் இவ்விராசிகளின் பின்கூற்றிலே செவ்வாய் சனி வியாழனுடனே நிற்கில் குருசவுரி ஆர் சவுரி குருஆர் என மூன்று தோஷ யோகமுண்டாம். அக்காலம் சம் புத்தீவி லொன்பதிலொரு கூருன பரதகண்டத்தின் மனுடரெல்லா ரும் மிகுந்த தூர்ப்பிக்ஷத்தினுலே யிறந்துபோவார்கள். அப்போது மலை களினும் வனங்களினும் தேசங்களினும் ஊர்களினும் மனைகளினும் மன்றுகளினும் இறந்தகபாலங்களையுந் தரித்துக்கொண்டு பிசாசுகள் கெர்வமிகுந்து பாடியாடும்.

இதுவுமது.

வென்றிவிடையரிதன்னடுக்கூற்றின்மீன்றேட்கடையி
னின்றுறுநீலனுடன்குருநிற்பிற்குருசௌரியா
மன்றியுந்தீயோர்மடக்கத்தாங்கல்லோரதிசாரத்தும்
பொன்றிடுநல்லுயிர்போரிற்பிணியிற்பசியின்மிக்கே.

(எ - து.) இடபம் சிங்கநடுவிற் றிரேக்காணத்தும் மீனம் விரிச் சிகங் கடையிற் றிரேக்காணத்தும் நின்றசனியுடனே வியாழனிற்கிற் குருசவுரியென்று பெயராம். அக்காலத்திலே குரூரகிரகம் வக்கிரிக்கச் சவுமியக்கிரகம் அதிசாரம் பெற்றகாலத்தும் மனுஷரெல்லாரும் போ ரினுலும் வியாதியாலும் பசியாலு மிறப்பர்கள்—எ - று. (கச)

இதுவுமது.

தக்கவிடைமீனரிதனுக்கோலிற்சனியுஞ்சேயும்
வக்கிரஞ்செய்திடில்வாரணமானுடர்மாப்பசுக்க
ளுக்கிடுமஃகமுலர்ந்திடும்பாம்புடனுற்றசுன்னு
மக்குணஞ்செய்யவனைத்துமூன்றாகாதொன்றுமென்பரே.

(எ - து.) இடபம் மீனம் சிங்கம் தனு துலாம் இவற்றினின்று சனியாதல் செவ்வாயாதல் வக்கிரித்து மேடம் கும்பம் கர்க்கடகம் விரிச்சிகம் கன்னி இவற்றிலே புகுந்துநின்ருல் ஆனை மனுஷர் குதி ரை பசுக்கள் இவையிறக்கும். இராகு கேதுக்களுடன் சனி கூடினு லும் வக்கிரித்துநின்ருலும் முன் சொல்லிய பிராணிகள் மூன்றுகூறு நாசமாம் ஒரு கூறிருக்கும்—எ - று. (கரு)

இதுவுமது.

பாந்தளுடன்சேப்படியாடக்கிற்படியரசர்
காந்தியமர்செய்வர்கற்றோருடனுறிற்காலனன்றும்

வேந்தனுடனுறில்வானம்விழாதுமிகுமழையாம்
பூந்தன்குழலாய்புகருடனிற்பிலிப்பூதலத்தே.

(எ - து.) இராகுகேதுக்களுடன் செவ்வாய்கூடி நடக்கில் யுத்த முண்டாம். புதன்கூடி நடக்கில் நற்காலமாம். வியாழன்கூடி நடக்கில் மழையில்லையாம். சுக்கிரன்கூடி நடக்கி லதிக மழையாம்—எ-று.

மகக்குறி.

மகத்துக்குத்தெற்காய்வளர்மதியேகிலகமுடியும்
பகுத்திடையேகிலிரட்டிகொண்டோங்கிடும்பாங்குடைய
மிடத்தவடக்கேகிலஃகங்கடையினின்வீழுமாசி
மகத்தைமதியிழந்தேகிடின்மன்னர்மடிவர்களே.

(எ - து.) மாசிமாதத்துப் பூரணசந்திரன் மகநட்சத்திர * நாலுமீனுக்கும் தெற்கே நடக்கில் அஃகங்குறையும். முதன்மீன் இரண்டாமீன் மூன்றுமீன் உடனடக்கில் அஃகமிரட்டியாம். நாலாமீனுடனடக்கில் துர்ப்பிக்ஷமாம். நாலுமீனுக்கும் நடுவே செல்லுமாகில் இராசாக்களுக்கு மிகவுந்தோடாம்—எ-று. (கஎ)

மழைக்குறி.

குருவுடன்கூடிக்குசன்முன்செலமழைகுன்றும்வெள்ளி
வருபுதன்றன்னொடுகூடின்மழைவெள்ளம்வான்சுடரோ
னிருதிறத்தோர்க்குமிடைநிற்கிலில்லையிரவிபின்சேய்
பொருதெழமுன்புபுகர்நிற்கில்வானம்பொழிந்திடுமே.

(எ - து.) வியாழனுடனே செவ்வாய் கூடி யாதித்தியனுக்கு முன்னடக்கின் மழையில்லையாம். புதனுஞ் சுக்கிரனுங் கூடில் வெகு மழையாம். புதனுக்குஞ் சுக்கிரனுக்கு நடுவே ஆதித்தியனிற்கிற்பானு மத்தியமென்று மகா தோஷமாய் மழை யில்லையாம். ஆதித்தியனுக்குப் பின் செவ்வாயுதிக்க முன்னே சுக்கிர னுதிக்கில் வெகுமழையாம்—எ-று. (கஅ)

இதுவுமது.

என்றுங்கதிர்பின்புவெள்ளியெழமுன்புசேயெழுநா
ளொன்றுமழையில்லையும்பர்குருக்குசனோடுதிக்கி
னின்றிடும்வானம்புதன்பகலுட்டோன்றினிலன்சேயோ
னன்றியவக்கிரமாயினும்வானமடைத்திடுமே.

---

* சிலர் நாலுமீனுக்குத் தெற்கே சந்திரன்செல்லுமாகில் அஃகம் வளருமென்பர்.

(எ - து.) ஆதித்தியனுக்குப்பின் சுக்கிரனுதிக்க முன்பு செவ்வா யுதிக்குங்காலம் மழையில்லையாம். வியாழன் செவ்வாயுடனே யுதிப்பினும் புதன் பகலுதிப்பினுஞ் சனி செவ்வாய் வக்கிரிப்பினும் மழையில்லையாம்—எ-று. ஆதித்தியனுக்கு முன்பு வருகிறதைப் புதன் பகலுட்டோன்றி லென்றார். (கசு)

இதுவுமது.

விளக்குத்திரந்தேர்பனைவிசாகத்துச்சேய்மேவிநிற்பி
னெளிக்கும்மழைகிழக்கொண்புகர்சோதிமுதன்மூன்றினு
மளிக்குமகமுதன்மேற்கைந்தினுநிற்பினுயிழையாய்
துளிக்குமழையில்லையாமாறிநிற்பிற்சொரிந்திடுமே.

(எ - து.) செவ்வாய் சோதி உத்திரம் உரோகிணி அனுஷம் விசாகம் இவற்றினிற்பின் மழைக்குறைவாம். சுக்கிரன் சோதி முதன் மூன்றுநாட் கிழக்கே நிற்பினும் மகமுத லைந்து நாண் மேற்கே நிற்பினும் மழையில்லையாம். இந்நாட்களிற் கிழக்கு மேற்கு மாறிநிற்கின் மழை மிகவுண்டாம்—எ-று. (உ0)

இதுவுமது.

நீரிற்புகரு * நெருப்பிற்கதிருநிலாக்கலைநண்
டார்விற்குடந்தேளமரின்மழைபெரிதக்காலத்துத்
தேரிற்கதிர்க்கும்புகர்க்குமுன்னேசெய்யோனேகிற்றூறி
மாரிக்கணமின்றிமண்டலமாமழையாமென்பரே.

(எ - து.) பூராடத்திலே சுக்கிரனிற்பினும் கார்த்திகையி லாதித்தியனிற்பினும் சந்திரன் மகரம் சர்க்கடகம் தனு கும்பம் விரிச்சிகம் இவற்றில் வருஷகாலத்து நிற்பினும் வெகு மழையாம். ஆதித்தியனுக்கு முன்னே யாதல் சுக்கிரனுக்கு முன்னேயாதல் செவ்வாய் நிற்கின் மழை சுழித்துப்பெய்தல் மண்டல மழையாய்த் தூறிப்பெய்தல் செய்யும்—எ - று. (உக)

மாதமழைக்குறி.

விடையிற்கதிருறுநாளில்விசாகமுதலைந்துநா
ளடைவிற்புயன்மாறிலாடிமுதற்றிங்களைந்தடைவே
தடையுற்றிடுமோனிப்பஞ்சமியிற்றக்கவாயுவிற்கால்
புடையுற்றொர்சாமமுண்டேற்புயல்பெய்யுமிப்பூதலத்தே.

* சிலர் நெருப்பென்று சேட்டைக்கும் பெயராதலின் சேட்டையி லாதித்தியனிற்குங் காலமும் வெகுமழையென்று சொல்வார்.

(எ-து.) வைகாசி மாதத்து விசாகம் அனுஷம் கேட்டை மூலம் பூராடம் இந்நாட்களிலே மழை பெய்யாதாகில் ஒரு மாதத்துக்கொரு நாளாக ஆடிமாதமுதல் மழை குறையும். ஆனி மாதத்துப் பூருவபக்கப் பஞ்சமியிலே வாயுமூலையிற் காற்றொரு சாமத்தளவு முண்டாகில் அவ்வாண்டு வெகுமழையாம—எ-து. (௨௨)

முதுவுமது.

நற்றாவிளக்குவெமிகடைக்குளத்தாப்பூரணை
யிற்றாரப்பிறுன்னை னுடைவாரத்தெழிலாடியின்
மற்றாரமாதன்மழையாதனுண்டேல்வாமிருத்துச்
செந்தாமரைமங்கைநோக்குடைத்தாவமிதேமொழியே.

(எ-து.) ஆடி மாதத்துச் சோதியும் நவமியும் உத்திராடமும் பவுரணையும் சதுர்த்தியும் ஞாயிற்றுக்கிழமை கூடினும் அன்றித் தனித்துறினும் இந்நாளிலே மந்தாரம் மழை பரிவேடம் இந்திரதனு முழக்கம் இவை யுண்டாயி லவ்வாண்டு சுபட்சகாலமாம்—எ-து.

இதுவுமது.

மழைக்கோளரவம்புதனிடைபான்மதிமன்னுகாலந்
தழைக்குமமழைபெரிதாஞ்சுவர்நம்மோடுபோரகத்தி
லழைக்கும்புதன்புகர்சான்மழையாமாசியாதிபனி
யிழைக்கின்மழைநேனைமுதலாறுதிப்களைதிருறுமே.

(எ-து.) சுக்கிரன் இராகு கேது புதன் இவர்களுடன் சந்திரன் கூடின் மழையுண்டாம். சந்திரனை யொழிந்து புதனுக்கும் சுக்கிரனுக்கும் யுத்தமுண்டாய்ப் புதன் செயிக்கிற் காற்றுண்டாம். சுக்கிரன் செயிக்கின் மழையுண்டாம். மாசி முதலாடி யிறுதியாக மாதந்தோறு மூடுபனி பெய்யில் கார்த்திகை ஐப்பசி புரட்டாசி ஆவணி ஆடி ஆனி இம்மாதங்களிலே மழை மிகவுண்டாம். ஆவணி முதலாக முன் சொல்லாத மாதங்களிலே மூடுபனி யுண்டாகில் அம்மாதங்களிலும் மழையுண்டாம்—எ-து. (௨௪)

வருஷகெற்பம்.

தேனரிமானிற்கதிர்சேர்பொழுதில்வான்பெய்யிற்பெய்யு
மான்சிலைகோல்பெண்ணனிலுண்டேலிலையடுங்கோளதனி
லுறுதிற்சத்திரிற்பகற்சங்கிரமிக்கினென்றலகோ
ளின்னிரையேகின்மழைமிகவுண்டென்னிரைவளையே.

(எ-து.) ஆதித்தியன் கார்த்திகை ஆவணி தை இவற்றிற் சங்கிரமித்தகாலத்து மழை யுண்டாகின் மழை பெய்யும். மார்கழி ஐப்பசி

புரட்டாசி இவற்றின் சங்கிரம காலத்து மழை யுண்டாயின் இல்லையாம். ஞாயிறு செவ்வாய் சனி இவற்றுதல் சந்தியாகாலமாதல் பகற்காலமாதல் சங்கிரமிக்கின் மழைக்குறைவுண்டாம். ஐந்தாறுகோள் நிரையே சேர நிற்குமாயின் மிகவும் மழையுண்டாம்—எ-று. (உரு)

இதுவுமது.

நீரிற்கதிருறுநாளின்மந்தாரநிரம்பவுண்டேற்
றேரிற்கதிர்செங்கைபற்றியநாண்முதற்சேரமழை
யார்வுறப்பெய்புமலைநாட்டிலாறேழுநாளளவில்
வரித்திரளெழுநாளினில்வேலைமடுத்திடுமே;

(எ - து.) பூராடத்திலே ஆதித்தியன் புக்கநாள்முதல் கூ-நாட் சந்திராதித்தர்களை மந்தாரமறைப் புண்டாகில் திருவாதிரைமூன்றுங் காலி லாதித்தியன் புக்கநாள்முதல் மாதமொன்றுக்கு உவ-நாள்வீதமாகச் சையகிரியிலே மழை பெய்யும். ஆதித்தியகெதியால் ஆறேழு நாளளவும் சமுத்திரத்திலே மழைப் பிரளயம்டாயும்—எ-று. இப்பதின் மூன்றுநாளு நிருமலமா யிருந்தால் நாள்விதம்பார்த்து அந்தமாதமழை யில்லை யென்றுகாண்க. (உசு)

விற்நறி பரிவேடக்குறி.

பூரமுருளுத்திரமுதலேந்தினும்போர்வில்லிடி
லாருமணிதிசையஞ்சிருபான்பத்துமூவேழாறில்
சேரும்பரிவேடமுத்திரம்பூரங்கலஞ்செங்கையில்
வாருமெட்டோரொன்பதீரொன்பதேழின்மழைவருமே.

(எ - து.) பூரம் உரோகிணி உத்திரம் அத்தம் சித்திரை சோதி விசாகம் இந்நாட்களிலே மழை பெய்யும்பொழுது வில்விட்டால் ரு, உ0, க0, உக, சு, இந்நாட்களுக்குள்ளே மழை பெய்யும். உத்திரம் பூரம் இரேவதி திருவாதிரை இந்நாட்களிலே சந்திராதித்தர்களைப் பரிவேடிக்கில் அ, கூ, கஅ, எ, இந்நாட்களுக்குள்ளே மழை பெய்யும்—எ - று.

செக்கர்மேகக்குறி.

மூலமடுப்புப்பதரீரெட்டாமுதலஞ்சிற்பன்னொன்
றுஉத்திராடமுரசேறிற்கேட்டைமீரைந்துமூன்றிற்
றுலகட்டுச்சியினிற்செக்கர்மேகந்தரினுமா
னேல்கொளவெண்முகில்வான்றினமேழிலைத்தியதுவே.

(எ - து.) மூலம் பரணி பூரட்டாதி பூராடம் இந்நாட்களி லிரத்த மேகமுண்டாகி லெட்டாநாளிலே மழை பெய்யும். அசுபதியிலேர்

தாநாள் உத்திராடத்துப் பதினோராநாள் உத்திரட்டாதியி லேழாநாள் கேட்டையிற் பத்தாநாள் அனுஷத்தின் மூன்றுநாள் இவற்றிலேமத்தி யான மிரத்த மேகமுண்டாகின் மழை பெய்யும். மத்தியானம் திருவா திரையிலே வெண்முகிலுண்டாகி லேழாநாள் மழைபெய்யும். இப் படியே இந்திரசாபம் பரிவேடம் இரத்தமேகம் முதலியவற்றின் மழை யில்லையாயின் தேசத்துக்குத் தீதுண்டாம்—எ-று. (உஅ)

காற்றுக்குறி.

புந்தியுடன்புகர்சந்திரன்பூமன்பொருந்தியெழ
மந்தன்படப்பன்னிரண்டிற்கதிருறில்வாயுமிகு
முந்துஞ்சரத்திற்புகர்மாலரவமெழவொழிந்தோர்
வந்துஞ்சரத்துறில்வாயுப்புடைக்குமதிநுதலே.

(எ - து.) புதனுடன் சுக்கிரன் சந்திரன் செவ்வாய் கூடி உதிப் பச் சனி யேழாமிடத் தத்தமிக்க ஆதித்தியன் பன்னிரண்டாமிடத்து நிற்பினும், சுக்கிரனும் புதனு மிராகுவும் ஒரு சரராசியிலுதிப்ப அல் லாதார் சரராசியிலாதல் சராம்சகத்தே யாதல் நிற்பினும் பெருங்காற் றடிக்கும்—எ-று. (உகூ)

இதுவுமது.

சுத்தக்கதிரினிலோரையொன்றுந்துய்யபாகைபத்து
மெத்தப்புகவுய்த்துமேவியமண்டலத்திற்களைந்தாற்
சத்தக்கணிதர்கள்வாயுபுடமென்பர்சந்திரன்மா
லொத்தபுகர்பாந்தளுற்றவிடத்தேகில்வாயுவுண்டே.

(எ - து.) ஆதித்தியனுடைய சுத்தபுடத்திலே ஓரிராசியும் பத் துப்பாகையுங் கூட்டி மண்டலராசியிற் களைந்து நின்றசேடம் வாயுப் புடமாம். இதனையும் சந்திரன் புதன் சுக்கிரன் இராகு இவர்களுடைய புடத்தையும் வைத்தால் இவற்றில்வாயுப் புடமிகுந்திருக்கிற் பெருங் காற்றடிக்குமெனக் கணித சாஸ்திரிகள் கூறினர்—எ-று. (௩0)

பூமிக்கிரகணம்.

பட்டுக்கிடக்கச்சனிமதிநீரினைப்பற்றிநிற்ப
மட்டுற்றதார்வெள்ளிவந்தெழுங்காலைமரபில்வந்து
விட்டுக்கிடந்தநிலத்தின்மண்கொள்ளமேவார்கழியத்
தட்டின்றியேதனதாகுமென்றேதுவர்தாழ்குழலே.

(எ - து.) சனியேழாமிடத்து அத்தமயமாகி நிற்பச் சந்திரன் நாலாமிடத்து நிற்பச் சுக்கிரனுதயத்துநிற்ப நெடுங்காலம் விட்டு கிட ந்த நிலத்திற் பிரவேசித்து மிருத்திகை கொள்ளத் தனதாகுமென்று கூறுவர்—எ-று. (௩க)

இதுவுமது.

சாரிதன்வாரோதயவோரையிற்கருதும்மிருத்தை
சோவழக்குநிலமண்கொள்சிவன்றிறத்துமஃதாஞ்
சாருங்குடத்துக்குடக்காலினிற்சனிவாரோதய
நேருநிலத்துறுமண்ணையருந்துபநேரிழையே.

(எ - து.) சனிவாரத்துச் சனியிராசியான மகர கும்பங்களுக் கடைத்த நாள்களிற் சனிநவாங்சங்கத் திருத்தையில் வழக்குண்டான பூமியில் மிருத்திகை கிரகணம் பண்ணுக. வியாழக்கிழமையிலே வியாழனிராசியான தனு மீனங்களுக் கடைத்த நாட்களிலே வியாழன் நவாங்சகத் திருத்தையினுஞ் செய்குக. கும்பத்துக் கும்பநவாங்சகத்துச் சனிவாரோதயத்து விவாதநிலத்து மிருத்திகை கிரகணம் பண்ணவுந் தனதாகும்—எ-று. (௬௨)

இதுவுமது.

மகத்தின்மதிக்காலின்மாமதியுற்றெழமன்னுகாரி
பகுத்தவரவிற்றனுவெழகக்கராய்ப்பாந்தட்டரு
முகுர்த்தமதாயிடமுன்னுரத்தாற்றவழ்வுற்றுவாயால்
வகுத்தவழக்குறுமண்ணுகரத்தனதாய்வருமே.

(எ-து.) மகநட்சத்திரத்து நாலாங்காலிற் சந்திரனுதிப்ப விவாதநிலத்து மிருத்திகை கிரகணம் பண்ணுக. ஆயிலியத்துத் தனுவுதயமாகச் சற்பமுகூர்த்தத்து நக்கினமாக மார்பாலே தவழ்ந்துபோய் விவாதநிலத்து மண்ணைப் புசிக்கத் தனதாகும்—எ-று. (௬௩)

இதுவுமது.

பூவின்கொழுநன்கடைக்காலிற்றேள்பொறிநண்டெழவு
மேவும்விசாகத்தனுஷத்துவிற்றேளலவனெழ
மாவலிசேயங்சகத்துவழக்குறுமண்ணுகரக்
காவன்மதிநாளிலாங்கவன்காலெட்சியுங்கருதே.

(எ - து.) திருவோணத்து நாலாங்காலிலே விரிச்சிகம் தனு கர்க்கடகம் உதயமாகவும் விசாகம் அனுஷம் இந்நாளில் தனு விரிச்சிகம் கர்க்கடகம் உதயமாகவும் செவ்வா யங்சமாகவும் மிருகசீரிடத்துச் செவ்வாயங்சத்து மிதுனம் உதயமாகவும் விவாதநிலத்து மண்ணைப் புசிக்கத் தனதாகும்—எ - று. இப்படி மிருத்திகை கிரகணம்பண்ணப் பூசிக்கத் தனதாகுமென்று விருகற்பதிவாக்கிய முண்டென்க. அதியுதயத்தையாங்கவன் காலெட்சியென்றார். (௬௪)

சத்துருவசியம்.

அங்காரகன்கதிர்மாலணிவெட்சியினொன்னலரைச் [ன்
*சங்காத்தங்கொள்பதம்வற்கோத்தமத்துத்தரும்வெள்ளிபொ
மங்காதவெட்சியுநீரின்மதிவெள்ளிபொன்னெட்சியுஞ்
§ சிங்காதமித்திராவர்செறுநரைக்கண்டிடிலே.

(எ - து.) செவ்வாய் ஆதித்தியன் புதன் இம்மூவரு முதயத்தி னிற்கவாதல் சுக்கிரன் வியாழன் வற்கோத்தமத்து நின் றுதயம் பெற வாதல் சந்திரனும் வெள்ளியும் நாலாமிடத்து நிற்ப வியாழனுதயத் தாதல் சத்துருக்களைக் கண்டு சிநேகம் பண்ணக்குறையாத வுறவி வர்கள்—எ - று. (௩௫)

இதுவுமது.

ஆட்சியின்மேவிப்புகர்நான்கினிற்பவணிமதிய
மேட்சியினுற்றிடவிவ்விதற்கோராறினிலெழிற்பொன்
மீட்சியநோக்குளதாகியகாலத்துமேவலரைத்
தாட்பவநோக்கிடமித்திராவர்தளிரடியே.

(எ - து.) சுக்கிரன் ஆட்சிபெற்று ௪-ம் இடத்து நிற்பச் சந்திர னுதயத்தும் வியாழன் ௬-ம் இடத்து நிற்பச் சத்துருக்களைக் கண்டு அவர்கள் பாதத்தினகத்தைப் பார்க்க உறவாவர்கள்—எ - று. (௩௬)

மரம்வெட்ட.

சனியறவுற்றெழச்சாற்றியவிட்டிவிடயோகத்தி [தை
னினியெழிலோர்மரம் வெட்டவெட்டுண்ணு மெல்லாவிருத்
பனிமதிபொன்சுக்கிரன்பார்த்துநிற்குமாண்போரையினிற்
றனிசுநோய்திரும்பகைநனிதுஞ்சிடிற்சாலநன்றே. (௩௭)

வெள்ளிக்கிழமையில்வெள்ளியுதித்திடவெண்மதிய
மள்ளுறுதிக்கோளிராசியினினிற்பவங்கண்மேவித்
தெள்ளுஞ்சனியிற்றலையுவாவிற்செய்யோனுயிரெழ
வெள்ளுமரம்வெட்டமேவாரழிவரினவளையே. (௩௮)

இவ்விரு செய்யுளுக்கும் ஏனைய செய்யுளைப்போல உரைவரை யத்தக்கதன்று. ஆகையால் இவற்றின் பொருளைக் குருமுகமாகப் பெ ற்றுக்கொள்க.

---

* சங்காத்தம்-சிநேகம்.

§ சிங்கல்-குறைவு.

## சுத்தி.

காதன்மணம்புங்சவனமேழிற்காதுகுத்தன்முடி
யாதிமயிர்கல்விநாலெட்டில்யாத்திரையஞ்சிற்பத்தி
லோதருமூண்பன்னிரண்டெட்டினில்வாத்துவத்திற்புகன்
மேதகுமேழெட்டொடந்தமுஞ்சுத்தியாய்வேண்டுவரே.

(எ - று.) விவாகத்துக்கும் புஞ்சவனத்துக்கும் எ-ம் இடமும் கன்னவேதனத்துக்கும் முடிகுட்டன் முதலியவற்றிற்கும் சௌளத்திற்கும் வித்தியாப்பியாசத்துக்கும் உபநயனத்திற்கும் அ-ம் இடமும் யாத்திரைக்கு ரு-ம் இடமும் அன்னப்பிராசனத்துக்கு கல-ம் இடமும் வாஸ்துவுக்கு அ-ம் இடமும் கஉ-ம் இடமும் கிருகப்பிரவேசத்துக்கு எ, அ, கஉ, இவ்விடங்களும் சுத்தியாகக் கொள்வது—எ - று. (ஙகூ)

## இதுவுமது.

மருந்துணார்மூன்றினிலாடைபுடாறினுவிலெட்டில்
விரும்பார்கடாபனமேவாறிரண்டிற்றனதானியம்
பொருந்தாருதயத்துமங்கையர்போகம்பதினொன்றினிற்
சுரும்பார்குழலாய்சிராத்தஞ்செய்யார்கோட்கடுன்னிடிலே.

(எ - று.) ஔஷதமுண்பதற்கு ங-ம் இடமும் நவவஸ்திரந்தரிப்பதற்கு சு-ம் இடமும் தெய்வப்பிரதிட்டைக்கு சு-ம் இடம் அ-ம் இடமும் தனதானியங்கொள்ளற்கு கஉ-ம் இடமும் ஸ்திரிபோகத்துக்கு உதயமும் சிராத்தத்துக்கு கக-ம் இடமும் சுத்தியாகக்கொள்வது—எ - று. (சo)

## இதுவுமது

மங்கலகாரியம்யாவிற்குமந்தமாறெட்டிடத்துந்
தங்குமதியுந்தவிரப்படுந்தளிர்மெல்லடியா
யிங்குறுசிவனெழுமெனுநன்றன்றியாத்திரைக
டங்கவதுவைகெடுஞ்சனித்தாலல்லவாய்விடுமே.

(எ - து ) சகலமங்கல காரியங்களுக்கும் சந்திரன் கஉ, சு, அ, இவ்விடந் தவிரப்படும் இக்காலம் வியாழனிலக்கினத்து நின்றுனு மாகாது. இவ்விடங்களிற் சந்திரனிற்க யாத்திரை போகினுசமாம் விவாகஞ் செய்யில்விதவையாம். பிராணிகள் பிறக்கினும் நாசமாம்—எ - று. (சக)

## யோகினிவருந்திசை.

கொடிகரிதூமநாய்சியங்கொடுவிடைவாயுவிச
னெடுவிண்ணிரயமெனுமடைவேநிறைபக்கத்தாதி
யுடைவின்வருமென்பயோகினியாந்திதிவாரநாளும்
வடுவெனபார்சூதுவழக்கொடுபோர்வழிபோதற்குமே.

(எ - து.) இந்திரன் குபேரன் அக்கினி நிருதி யமன் வருணன் வாயு ஈசானன் ஆகாயம் பூமி என்னும் பத்துத் திக்கு மடைவே பூருவபக்கப் பிரதமைமுதல் தெசமியந்தம் யோகினிவரும். பின்பு ஏகாதசிமுதல் அபரபக்கப்பஞ்சமி யந்தமிப்படியேவரும். பின்புசட்டிமுதவிப்படியே வரும். சூது வழக்கு யுத்தம் யாத்திரை இவற்றிற்குத் திதி வாரநாட் பிரதானமல்ல; யோகினி பிரதானம்—எ - று.

## யோகினிவடிவம்.

நக்கம்விரித்ததலைவெள்ளைப்பூசிநாணாரமின்றி
யக்கையணிந்துவெற்றோடேந்தியாருவமங்கலியாஞ்
செக்கர்நிறத்தொருசேயிழையோகினிநியள்முன்னும்
பக்கத்திடத்தும்வலத்துடன்பின்னும்பலந்தருமே.

(எ - து.) யோகினி வடிவமாவது நிருவாணமும் விரிந்திகேசமும் சருவாங்கமும் வெண்ணீற்றுப் பூச்சும் மங்கலாபரணமின்றிச் சங்காபரணமும் கையில் வெறியகபாலமும் நிராதவமங்கலமான சிவந்தவருணம் உடைய யோகினியானவள் முன்னும் இடப்புறமுமாகாது, பின்னும் வலப்புறமு நன்றும்—எ - று. (சங)

## ஆடல்பாடலரங்கேற்ற.

பூசம்பரணியிரேவதிபூராடம்புள்ளறுவை
யீசன்கனன்முறநற்றிதியாழ்சிங்கந்தேட்குளிர்வில்
வீசுந்துலைமீனெழமதிமால்வெள்ளிபொன்றினத்துப்
பேசுறுமாடரங்கேற்றவும்பாடவும்பெற்றனவே.

(எ - து.) பூசம் பரணி இரேவதி பூராடம் அவிட்டம் சித்திரை திருவாதிரை கார்த்திகை விசாகம் இந்நாட்களிலேசுபதிதிகளில் மிதுனம் சிங்கம் விரிச்சிகம் கர்க்கடகம் தனு துலாம் மீனம் இவ்விராசிகளுதயமாகத் திங்கள் புதன் வியாழன் வெள்ளி இவர்கள் வாரத்தில் கூத்துக்காப்பிய முதலிய பாட்டுக்க ளரங்கேற்றுவது—எ - று. (சச)

## அங்காதித்தியன்பலன்.

அருக்கனிலைநாண்முதன்மூன்றுமூன்றுமைந்தெட்டுமட்டு
நிரைத்ததலைவாய்வயிறுகைகீழ்கழனிற்பினேரே
தரைக்கிறைவன்பண்டிதன்றனவான்றனநாசனெங்கு
மிரப்புடையோனென்றறிபிறந்தோரையினவனையே.

(எ-து.) அங்காதித்திய னறியும்படி ஆதித்தியனின்ற நாள்முதலாக யாவனொருவன் செனித்த நாள்வரையாக வெண்ணினால் ங, நாள்தலையினும் பின் ங, நாள்வாயினும் பின் ரு, நாள்வயிற்றினும்பின் அ, நாட்கையினும் பின் அ, நாட்காலினுமாகக்கணித்துப் பிறந்தநாண்

முதலாகபலன் சொல்லுக. தலையாகிற் பூலோகத்துக் கிராசாவாம். வாயாகில் வித்துவானும். வயிறாகிற் றனபதியாம். கையாகிற் றனவீன னும். காலாகிற் சகலவிடங்களினு மியாசிப்பன்.

அங்கசந்திரன்பலன்.

அண்டந்தொடைகணைக்கால்பதமுச்சிகண்வாய்செவிதோ
டொண்டையுரம்வயிறங்கச்சோமற்குத்தன்னோரைபற்றிக்
கண்டனரின்பநற்காலஞ்சுகநோய்கணிகைதுன்ப
முண்டிடரின்பமொடோகையிலாபநோயுற்றிடுமே.

(எ - து.) அங்கச் சந்திரனறியும்படி சென்மராசி முதலாகப் பன்னிரண்டா மிடத்துக்கும் தலை தொடை கணைக்கால் கால்கள் உச்சி கண்கள் வாய் செவி தோள்கள் கழுத்து மார்பு வயிறு இதற் கடைவே இன்பம்நற்காலம் சுகம் நோய் திரிசேர்வை துன்பம் உண்டி இடர் இன்பம் பிரியம் இலாபம் நோய் என்றிப்படிப்பலாபலனறிவது.

அங்கச்செவ்வாய்பலன்.

அரைதொடைகாலுச்சிகண்வாயிருதோள்வயிறுநெஞ்சு
நிரைபுறுதிகுணமஞ்சாறுமால்கண்முதலங்கங்கை
தரைமகனுண்முதற்சாவிடர்சேதந்தனப்பேறுநோய்
விரவுறுபோகமகப்பேறிலாபநோய்வெள்வளையே.

(எ - து.) அங்கச் செவ்வாயறியும்படி செவ்வாய்நின்ற நாண் முதல் இருபத்தேழும் ௩, ௩, ௫, ௬, க, உ, க, ௪, உ, என்றடை வே அரை தொடை கால் உச்சி கண் வாய் இருதோள் வயிறு நெஞ்சு இவ்வொன்பதங்கமும் மரணம் இடர் பொருட்சேதம் பொருட்பேறு நோய் போகம் மகப்பேறு இலாபம் நோய் என்றிவ்வொன்பது பலனு மறிவது—எ - று. (௬௭)

அங்கபுதன்பலன்.

பதந்தொடையண்டம்வயிறுரந்தோண்முகமுச்சியென்ற
சிதங்கனறிவினைபாலிடநான்குமாறென்றடைவே
புதன்செறிநாண்முதற்போக்குநற்போகம்புதல்வர்பேறு
விதம்படுநோய்பகைவேதனைசாவுமிகவுநன்றே.

(எ - து.) அங்கப்புதனறியும்படி புதனின்ற நாண்முதல் இருப த்தேழும் க, ௩, ௩, உ, ௫, ௩, ௪, ௬, என்றடைவே கால் தொடை தலை வயிறு மார்பு தோள் முகம் உச்சி இந்த வெட்டங்கமும் யாத்தி ரை போகம் புத்திரபேறு நோய் பகை துன்பம் மரணம் நன்மை என் றிவ்வெட்டுப் பலனுமறிவது—எ - று.

அங்கவியாழன்பலன்.

தலைதோள்கழுத்துரம்பாதம்வயிறுகண்டன்னிலம்பொன்
நிலைசேரநான்குநான்கொன்றைந்துமாறைந்திரண்டிலுறி

னுலைவில்பெரும்போகமுண்டிமிகுதியுலப்பிதிரு
நலமிகல்பீடையிலாபஞ்சுகமென்பர்நன்னுதலே.

(எ - து.) அங்க வியாழனறியும்படி வியாழனின்ற நாண்முதல் இருபத்தேழும் ௬, ௪, ௩, ௫, ௬, ௫, ௨ என்றடைவே தலை தோள் கழுத்து மார்பு கால் வயிறு கண் இந்த வேழங்கமும் போசம் உண்டி செல்வம் பகை பீடை இலாபம் சுகம் என்றிவ்வேழு பலனுமறிவது —எ - று. (௬௯)

அங்கவெள்ளிபலன்.

உச்சிகண்வாய்கண்டந்தோளுமழுந்தியிலிங்கமூரு
மெச்சிடுங்காலடிமேல்விரலெங்கணும்வெள்ளிதன்னை
வைச்சிடுமீனமுதலுறுமோரைவலமிடநா
ணிச்சயமாய்வலநன்றிடந்தீதுச்சிநிந்தைநன்றே.

(எ - து.) அங்கவெள்ளியறியும்படி வெள்ளிநின்ற மீனமுதலிய ராசிவலநாளிட நாண்முதல் மீனம் மேடம் இடபம் மிதுனம் சர்க்கடகம் சிங்கம் கன்னி துலாம் விரிச்சிகம் தனு மகரம் கும்பம் என்றடைவே உச்சி கண் வாய் கழுத்து தோள் மார்பு வயிறு இலிங்கம்தொடை புறங்கால் உள்ளங்கால் மேல்விரல் இந்தப் பன்னிரண்டங்கமும் வலப்புற நன்று. இடப்புறந்தீது. இதிலுச்சி நன்று. என்றிப்பன்னிரண்டு பலனுமறிவது—எ - று. (௭௦)

அங்கச்சனிபலன்.

ஒன்றுநான்காறுநான்கோரைந்துமூன்றிரண்டுற்றிரண்டு
மென்றும்வாய்கைகாலிடக்கைவயிறுச்சிகண்ணிலிங்கம்
பொன்றுமரணம்வழிபோக்கிடர்திருப்போற்றுநன்மை
நன்றுதீதங்கச்சனிநின்றநாண்முதனாட்டிக்கொள்ளே.

(எ - து.) அங்கச்சனி யறியும்படி சனிநின்ற நாண்முதல் இரு[illegible]த்தேழும், க, ௪, ௬, ௪, ௫, ௩, ௨, ௨, என்றடைவே வாய் வலக்[illegible] கால் இடக்கை வயிறு உச்சி கண் இலிங்கம் இவ்வெட்டங்கமும் அழி[illegible] மரணம் வழிப்போக்கு இடர் செல்வம் நன்மை நன்று தீது என்[illegible] வெட்டுப் பலனுமறிவது—எ - று. ([illegible]

எச்சவினைப்படலம் முற்றிற்று.
ஆகக்கலித்துறை-௭௩௫.

---

## விதானமாலை மூலமும் உரையும்

முற்றிற்று.

---

| | | | | |
|---|---|---|---|---|
| க0ங | ரு | க | ரேகைவத்து | சேரைவைத்து |
| க0சு | ரு | அ | நாளவாக | நாளளவாக |
| க0கூ | கரு | கக | கினதே | கினத்தை |
| ககக | உங | உ | மன்பை | மனபை |
| ,, | ,, | கூ | லனப | லனபா |
| ககரு | சா | எ | இரோவ | இரேவ |
| ,, | ,, | கூ | மிடமின்றி | மிடமுமின்றி |
| ,, | கூ | க | நாளோறை | நாளோரை |
| ககஎ | கச | ச | கதித்ரு | கதிருத் |
| ககஅ | கஅ | உ | புதனங்க | புதனங்சக |
| க௨0 | உக | அ | சுரசு | சரசு |
| ,, | உச | அ | பதிக்கும் | பதிக்குப் |
| க௨ச | ஙரு | க | முடித்து | முடித்து |
| க௨சா | சா | உ | வித்தர் | வித்தல் |
| க௨அ | கக | ங | டுசான்ன | சொன்ன |
| கச0 | கூ | சா | சமம் | சலம் |
| ,, | க0 | சா | பாபக் | பாகக் |
| கசக | க௨ | சா | கிழமையம் | கிழமையும் |
| கசஎ | க | க௨ | வதைத் | வைத் |
| கருச | க | உ | திருதிரு | திருந்திரு |
| கருஅ | கச | ரு | கிருக | கிரக |
| ,, | ,, | அ | கிருக | கிரக |
| ,, | கரு | அ | கிருக | கிரக |
| கசா௨ | கக | கூ | யிடுனும | யிடினும் |
| கசாங | கஅ | க | சொண்டல | கொண்டல் |
| கசாரு | ங | ரு | உக்தர | உத்தர |
| கசாஎ | கூ | கக | அவை | இவை |
| ,, | க0 | க | மூறின் | மூறின் |
| கஎசா | ஙஎ | க | சனியற | சனியர |
| கஎஅ | சச | கூ | கூத்துக்காப்பியம் | கூத்து, காப்பி... |
| ,, | சரு | க | மட்டு | மெட்டு |

## விஷயப்பிழைதிருத்தம்.

| | | |
|---|---|---|
| ஙரு | சத்திரிக்கிராணதோஷம் | சத்திரிக்கிரசணதோ... |
| ருஎ | புட்கரபாதம் | புட்சரபாசம் |
| க0ங | விஷ்டுணுபெலி | விஷ்ணுபெலி |
| கச௨ | கிணறுகுளங்களல்ல | கல்ல |
| கசஅ | கிரகசத்தமவர்ககம் | கிருகசத்தமவர்க்க... |
| கருஅ | கிருகசாந்தி | கிரகசாந்தி |

## குறிப்பின் பிழைதிருத்தம்.

| | | |
|---|---|---|
| க0கூ | யாற்று | யாயிற்று |
| கருஅ | ராசர | பராசர |

☞ அச்சுப்பிழையென யாவர்க்கும் தெள்ளிதிற் புல... பிழைகள் ஈண்டுக் குறிக்கப்பட்டில.

# பிழைதிருத்தம்.

| ம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௩ | ௪௩ | ௬ | கெடுத்தலும் | கொடுத்தலும் |
| ௧௮ | ௨௬ | ௨ | பெருமா | பெறுமா |
| ௧௯ | ௨௯ | ௩ | சதாப்பத | சதுர்ப்பத |
| ௨௧ | ௫ | ௪ | யொக | யோக |
| ௨௩ | ௧௨ | ௨ | யரி | பரி |
| ௨௪ | ௧௩ | ௧ | மரன் | மான் |
| ௩௧ | ௩௫ | ௮ | வியாதி | வியதி |
| ௩௪ | ௪௭ | ௬ | பசு | சுப |
| ௩௭ | ௫௩ | ௧ | சரணமங்கதங் | காணமங்சகங் |
| ,, | ,, | ௫ | கரண | காண |
| ,, | ,, | ௬ | நவாங்கமு | நவாங்சமு |
| ௪௨ | ௭௦ | ௬ | தியாணம் | தியானம் |
| ௪௬ | ௮௦ | ௪ | வண்ட | வாண்ட |
| ௫௦ | ௯௧ | ௪ | ரேரதி | ரோதி |
| ௫௭ | ௧௪௨ | ௪௦ | வண | வாண |
| ௫௯ | ௧௧௭ | ௬ | ௫௦௦ | ௫௦௦௦ |
| ௬௪ | ௧ | ௬ | சாவி | சவி |
| ௬௨ | ௪ | ௪ | திற | திர |
| ,, | ௫ | ௯ | சோரு | சோறு |
| ,, | ,, | ,, | சோரு | சோறு |
| ௪ | ௫ | ௪ | நண்ணுத | நன்னுத |
| ௭௦ | ௪ | ௩ | மூன்றிற் | மூன்றிற் |
| ,, | ,, | ௪ | பொய் | பெய் |
| ௧ | ௨ | ௧ | வானி | வாணி |
| ௨ | ௫ | ௧ | மூன்றி | மூன்றி |
| ௪ | ௧ | ௨ | செண்ப | கெண்ப |
|  | ௧ | ௧௧ | வர்சனை | வர்த்தனை |
| ௬ | ௧ | ௨ | சிறை | சிற |
|  | ௭ | ௪ | மாயுடுவண் | மாயுவெண் |
| ௦ | ௪௩ | ௪ | திலை | சிலை |
| ௨ | ௨௦ | ௫ | செவ்வாய்த்திசை | செவ்வாய்திசை |
|  | ௭ | ௨ | சண்மா | சணமா |
|  | ௮ | ௪௦ | பொல்லர் | பொல்லா |
|  | ௯ | ௪ | யுறதும் | யுறுமே |
|  | ௪௫ | ௭ | திரிபுடை | திரியுடை |
|  | ,, | ௯ | இவருடை | இருவருடை |
|  | ௧௬ | ௯ | தக்கினமாக | தக்கிணமாக |
|  | ௧௭ | ௧௪ | சிரிடம் | சிரிடமும் |
|  | ,, | ௧௫ | வேத | வேதை |
|  | ௨௨ | ௧ | என்றென் | என்றன |
|  | ௪ | ௩ | தேளிருந்தை | தேளிருந்தை |